20930.
KOVILOOR ANDAVAR LIBRARY
20930

# ஆதிசங்கரர்

புண்ணியமிகு பாரத நாட்டின் தென்பகுதியில் கேரளநாடு உள்ளது. அந்நாட்டில் காலடி என்ற கிராமத்தில் சிவகுரு என்ற ஓர் அந்தணப் பெரியார் வாழ்ந்து வந்தார். அவருடன் ஆர்யாம் பாள் என்ற மனைவியும் சேர்ந்து வாழ்ந்து வந்தார்கள்.

கணவரும் மனைவியும் கருத்தொருமித்து இல்லற வாழ்வு நடத்தி வந்தார்கள். இறைவன் மீது நீங்காத பக்தி கொண்டவர் சிவகுரு. கணவ ரின் பக்திக்கு வேண்டிய பூஜை பணிவிடைகளைச் செய்து வந்தார் ஆர்யாம்பாள்.

ஆண்டுகள் ஓடி மறைந்தன. இவர்களின் சாந்த வாழ்வுக்கு ஒரு குழந்தை இல்லை என்ற குறை இருந்தது. பிள்ளையில்லாப் பெருங்குறை இருவர் மனதையும் வாட்டியது.

சிவகுருவின் மனக்குறையை அறிந்த அக்கம் பக்கத்து வீட்டார் அவருக்கு ஆறுதல் சொன்னார் கள் எல்லையில்லா ஈசன் பிள்ளைப்பேற்றின்

பெரும்பயனை எனக்கு என்று அளிப்பாரோ என்று ஏங்கினார் சிவகுரு.

ஒரு நாள் சிவகுரு வீட்டிற்குத் துறவி ஒருவர் வந்தார். அவரை இன்முகத்துடன் தம்பதிகள் வரவேற்றார்கள். இன்னமுது படைத்தார்கள். தம்பதிகளின் பணிவிடையைக் கண்ட துறவியார் ''அன்பரே! உங்கள் குழந்தைகளை அழையுங் கள்.'' என்று சொன்னார்.

துறவியாருக்கு என்ன பதில் சொல்வதொன்று புரியாமல் துயரக் கடலில் ஆழ்ந்து நின்றார் சிவகுரு. கணவரின் கலங்கிய கண்களைக் கண்ட தும் ஆர்யாம்பாள் வாய்விட்டுக் கதறி அழுதார்.

துறவியார் இருவரின் துயரத்தைப் புரிந்து கொண்டார். ''மெய்யன்பர்களே! உங்கள் மனக் கவலையை நான் புரிந்து கொண்டேன். விருஷாசலம் என்றும் சிவபுரம் என்றும் கூறப்படும் திருச்சூர் உள்ளது. அங்கு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை ஒரு மண்டலம் அதாவது 48 நாட்கள் மனமார பக்தியோடு விரதம் இருந்து வழி படுங்கள். உங்கள் மனக்குறை நீங்கும்; மகப்பேறு கிடைக்கும்'' என்று சொன்னார்.

துறவியின் அருள் வாக்கை அமுதவாக்கை நினைத்தார் சிவகுரு. அவருக்கு வழிபாடு செய்து வழியனுப்பினார்கள் தம்பதிகள். துறவி சென்றதும் இருவரும் திருச்சூர் சென்றார்கள்.

திருச்சூரில் வடக்குநாதன் என்று பக்தியோடு பக்தர்களால் அழைக்கப்படும் சிவபெருமானை ஆறுகாலமும் அகம் உருகி வழிபட்டார்கள். நெய்யால் புதையுண்டிருக்கும் சிவலிங்கம் பார்ப்போர் நெஞ்சில் பனிமலையில் பரமசிவன் வீற்றிருப்பது போல் எண்ணம் வரும். வடக்கு நாதன் தன்னை நாடிவரும் பக்தர்களின் மனக் குறையைத் தீர்த்து வந்தார். தீராத நோய்களையும் போக்கி வந்தார்.

பக்தி உள்ளம் கசிந்து கண்ணீர் விட்டால் கல்லும் கரைந்து கருணை புரியும் என்பார்கள். சிவகுரு தம்பதிகளின் ஒரு மண்டல பூஜை, பரமனின் உள்ளத்தை உருகச் செய்தது.

இறைவன் வாழும் ஆலயத்தை இருப்பிடமாகக் கொண்டு ஒருநாள் சிவகுரு தம்பதிகள் துயின்றார்கள். அவர்கள் கனவில் இறைவன் தோன்றினார். ''அன்புநெறி கடைப்பிடித்து, பக்தியுடன் வாழும் தம்பதிகளே! நீங்கள் விரும்பிய படி புத்திர வரம் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. புத்தியில்லாத நீண்ட ஆயுளையுடைய பல பிள்ளைகள் வேண்டுமா? புத்தியில் சிறந்த குறைந்த ஆயுளை உடைய ஒரு பிள்ளை வேண்டுமா?'' என்று கேட்டார்.

ஐயனே! எல்லாம் அறிந்தவன் நீ. உலகில் அழியாத புகழும், குறைவில்லா அறிவும் உடை

யவர்களால் உலகம் சிறக்கும். அறிவற்ற மூடர் களால் அழிவும் பாவமும் உலகில் பெருகுவும். அதனால் குறைந்த ஆயுள் உடையவனாயினும் குன்றுபோல் புகழ்பெற்றுக் குவலயம் போற்றும் ஒரு மகன் கொடுத்தால் போதும்.'' என்று கேட் டார்கள்.

பக்தர்களின் வேண்டுகோளைக் கேட்டுப் பரமன் பரவசம் அடைந்தார். ''மெய்யன்பர்களே! உலகம் முழுதும் போற்றி வணங்கும் ஒப்பற்ற ஒரு மகனை உங்களுக்கு வழங்குகிறேன்'' என்ல் சொல்லிவிட்டு மறைந்தார்.

உறக்கத்தில் இருந்த தம்பதிகள்எழுந்தார்கள். தூக்கத்தில் கண்ட கனவைப்பற்றி ஒருவருக் கொரு வர் சொல்லிக் கொண்டார்கள். இறைவனின் கருணையை எண்ணி எண்ணி வியந்தார்கள்.

மறுநாள் திருச்சூரிலிருந்து காலடிக்குத் திரும் பினார்கள். பத்து மாதங்கள் ஓடின. வைகாசி மாதம், வளர்பிறை ஐந்தாம் நாள் அன்று ஆர்யாம் பாளுக்கு அழகிய ஆண் குழந்தை பிறந்தது.

இறைவன் அருளால் பெற்றபிள்ளையானதால் அவனுக்குச் ச்ங்கரன் என்று பெயரிட்டார்கள். சகலருக்கும் இன்பத்தைக் கொடுக்கும் அருட் குழந் தையைக் கண்ட பலரும் வணங்கினார்கள். குழந்தையின் அங்க அடையாளங்களைக் கண்டு அனைவரும் வியந்தார்கள்.

சங்கரன் இவ்வுலகில் பிறந்தபோது அந்தணர் கள் நடத்திய வேள்வித் தீ, வலமாகச் சுழித்துக் கொண்டு ஓங்கி வளர்ந்து எரிந்தது. வானில் விண் மீன் ஒளிமயமாகப் பிரகாசித்தது. இந்நிகழ்ச்சி களைக் கண்ட பெரியோர்கள் உலகில் எங்கோ ஓர் மகான் அவதரித்திருக்கிறார் என்று பேசிக் கொண் டார்கள்.

சங்கரனுக்கு மூன்று வயது ஆனது. சிவகுரு தன் மகனுக்கு எழுத்தறிவு கற்பிக்கத் தொடங்கி னார். சங்கரன் தந்தையின் போதனையை மனதில் நிறுத்திக் கொண்டான். அறிவில் உயர்ந்த வனாக விளங்கினான். குணத்தில் சிறந்தவனாகத் திகழ்ந்தான். அன்பால் அனைவரையும் தன்பால் இழுத்தான்.

மூன்று வயதில் முப்பது வயது அறிவும், ஆற்ற லும் பெற்றான். இந்து தர்ம சாஸ்திரங்களைத் தானாகவே கற்றான். படித்ததை மனப்பாடம் செய்யும் நினைவாற்றல் சங்கரனைப்போல் யாருக்கும் இருந்ததில்லை. சின்னஞ் சிறுவயதில் பெரிய சாஸ்திரங்களின் கருத்துக்களைத் தெளிவா கப் புரிந்து கொண்டான்.

சங்கரன் சொல்லும் கருத்துக்களைக் கேட்டு ஆர்யாம்பாள் அகம் மகிழ்ந்தார். தன் மகனின் அறிவை நினைத்து ஆனந்தப்பட்டார். சிவகுருவும்

தன் மகன் கூறும் கருத்துக்களைக் கேட்டு மனம் மகிழ்ந்தார்.

சங்கரனுக்கு நான்கு வயதாயிற்று. சிவகுரு காலனுக்கு இரையானார். தந்தையை இழந்த சங்கரன் மீளாத் துயரத்தில் ஆழந்தான். ஆர்யாம் பாள் மனவேதனையால் மெலிந்து போனார்.

'தந்தையோடு கல்வி போம்' என்ற பழமொழி யைப் பொய்யாக்க ஆர்யாம்பாள் தன் மகன் சங்கரனுக்கு ஐந்து வயதானதும் பூணூல் கல்யாணம் நடந்தினார். பிறகு அவனைக் குருகுல வாசத்திற்கு அனுப்பினார்.

குருகுல வாசம் சென்ற சங்கரன் குருவிடம் பல சாஸ்திரங்களைக் கற்றான். குருவிடம் பணிவும் அன்பும் கொண்டு மருவிலா சிறந்த பிரம்மச்சாரி யாக விளங்வினான்.

குருகுல வாசம் இருந்த போது, சங்கரன் வீடு வீடாகச் சென்று பிச்சை வாங்கி வந்தான். குரு குலத்தில் கற்ற கல்வியினால் ஒருவனும் கர்வம் கொள்ளக்கூடாது. மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன் என்ற எண்ணம் உள்ளத்தில் இருக்கக் கூடாது. தான் என்ற கெம்பாவம் ஆட்டிப் படைக்கக் கூடாது. இவைகள் அழியவே பிரம்மச் சாரி வீடுகள்தோறும் சென்று பிச்சை ஏற்க வேண்டும். இவ்விதியைச் சங்கரன் தவறாமல் செய்துவந்தான்.

சங்கரன் வழக்கம்போல் துவாதசி தினத்தன்று பிச்சை ஏற்கஓர் ஏழையின் வீட்டிற்குச் சென்றான். அவ்வீட்டில் உண்பதற்கு உணவு கிடையாது. துவாதசி தினத்தில் இறைவனுக்குப் படைக்க அவ் வீட்டுப் பெண்மணி ஒரு நெல்லிக்கனியை வைத்திருந்தாள்.

ஐந்து வயது சிறுவன் பிரம்மச்சாரியம் பூண்டு வாசலில் வந்து பிச்சைக் கேட்பதை அப்பெண் மணி பார்த்தாள். அவள் கண்களுக்குச் சங்கரன் பாலமுருகனாகத் தோன்றினான். அவனைக் கண்டதும் பிச்சைப்போட தன்னிடம் ஒன்று மில்லையே என்று கண்ணீர் விட்டாள்.

''அம்மா! என்னைப் பார்த்து ஏன் அழுகிறீர் கள்?'' என்று சங்கரன் கேட்டான்.

''அப்பனே! இந்த ஏழையின் வீட்டில் கை யேந்தி நிற்கும் உனக்குப் பிச்சைப்போட ஒன்று மில்லையே என்று நினைத்து அழுகிறேன். என் னிடம் இறைவனுக்குப் படைக்க ஒரு நெல்லிக்கனி இருக்கிறது. அதைப் பிச்சையாக உன் பாத்திரத் தில் இடுகிறேன்..'' என்று சொல்லிவிட்டுப் போட் டாள்.

ஏழைப் பெண்மணியின் அன்பு உள்ளத்தைக் கண்டு சங்கரன் உள்ளம் உருகினான். மீளா

வறுமைத் துயரில் வாடும் அப்பெண்மணியின் வறுமையைப் போக்க இலட்சுமியை நினைத்துக் கனக தாரஸ்தவம்'' என்ற ஓர் அற்புதத் துதியைப் பாடினான். அன்று முதல் அந்த ஏழையின் இல்லம் செல்வத்தால் செழித்தது. வறுமை ஓடி மறைந்தது.

குருகுலவாசம் இருந்த சங்கரன் மூன்றே ஆண்டுகளில் சகல சாஸ்திரங்களையும், வேதங்களையும், காவியங்களையும் இதிகாசங்களையும் கற்றுத் தேர்ந்தான். எட்டு வயதில் சகல கலைகளிலும் கெட்டிக்காரன் என்ற பெயருடன் தன் வீடு திரும்பினான்.

ஆர்யாம்பாள் கணவனை இழந்த கவலையால் நாளுக்கு நாள் உடல் மெலிந்து போனார். தாயின் கவலையைப் போக்க சங்கரன் பணிவோடும் அன்போடும் எல்லாக் காரியங்களையும் செய்தான்.

ஆர்யாம்பாள் நோயால் நடக்க முடியாமல் தளர்வுற்றார். காலடியில் இருக்கும்போது புண்ணிய நதியான பூர்ணாவில் குளிப்பார். இந்நதியைச் 'சூர்ணா' என்றும் 'ஆல்வாய் புழை' என்றும் சொல்வார்கள். ஆர்யாம்பாள் நடக்க முடியாததால் பூர்ணா நதியில் குளிக்க முடியவில்லை. இது ஒரு பெரும் மனக்குறையாக இருந்தது. அன்னை

யின் மனக்குறையைப் போக்கி அந்நதியில் நீராட வைத்தான் சங்கரன்.

ஒருநாள் முனிவர்கள் பலர் வந்தனர். சங்கரன் அவர்களைப் பார்த்து வணங்கினான். முனிவர்கள் கேட்ட கேள்விகளுக்குத் தயங்காமல் விடையளித்தான். அவன் அறிவுக் கூர்மையைக் கண்டு முனிவர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

''சங்கரா! நாட்டில் நாஸ்திகம் வலுத்து வருகிறது. இப்பொழுது உன் சேவை தேவைப்படுகிறது. நீ சென்று நாத்திகத்தை வென்று ஆஸ்திகத்தை நிலைநாட்ட வேண்டும். இதை மறந்துவிடாதே'' என்று கூறிவிட்டு முனிவர்கள் சென்றார்கள்.

முனிவர்கள் சொன்னது சங்கரன் மனதில் பதிந்துவிட்டது. அன்னையைப் பிரிந்து எப்படிச் செல்வது? என்று யோசித்தான். இரவு முழுவதும் உறங்காமல் ஈசனை நினைத்துக் கொண்டிருந்தான்.

மறுநாள் காலையில் அன்னையுடன் பூர்ணா நதியில் நீராடச் சென்றான். நதியில் நீராடிக் கொண்டிருக்கும்போது முதலை ஒன்று சங்கரன் காலைக் கவ்விக்கொண்டது.

முதலையின் பிடியிலிருந்த சங்கரன் 'அம்மா! அம்மா!' என்னைக் காப்பாற்றுங்கள். என்

காலை முதலைப் பிடித்துக் கொண்டது'' என்று கதறினான். சீலத்தின் ஞானி சங்கரன்.

''மகனே! சங்கரா! உன்னை நான் எப்படிக் காப்பாற்றுவேன். உன்னைக் காப்பாற்ற முடியாத பாவியாகக் கரையில் நிற்கிறேன்.'' என்று ஆர்யாம்பாள் சொன்னார்.

''அம்மா! என்னைக் காப்பாற்ற உங்களால் முடியும்.'' என்று சங்கரன் சொன்னான்.

மகன் என்ன சொல்கிறான் என்று ஆர்யாம் பாளுக்குப் புரியவில்லை. திகைத்து நின்றார். ''அம்மா! இந்தப் பிறவியில் நான் முதலையால் இறக்கவேண்டும் என்பது என் விதி. ஆனால் இப்பிறவியிலிருந்து நான் விடுபடவேண்டும். அதற்கு ஒரே வழி நான் வீட்டையும் உறவினர் களையும் துறந்து துறவியாக வேண்டும்.'' என்று சொன்னான் சங்கரன்.

''மகனே! என்ன சொல்கிறாய்? எனக்கு விளங்கும் படிச் சொல்'' என்று கேட்டார் ஆர்யாம்பாள்.

''அம்மா! சாஸ்திரப்படி சந்நியாசம் என்பது மறு பிறவியாகும். அதனால் அடுத்த பிறவி எடுத்த என்னை முதலை ஒன்றும் செய்யாது. நான் துறவியாவதற்கு நீங்கள் அனுமதி கொடுத்தால்

உயிர் பிழைப்பேன். என்னைப் பிழைக்க வைப்பது உங்களிடம்தான் இருக்கிறது.'' என்று சங்கரன் சொன்னான்.

சங்கரன் சொன்னதைக் கேட்ட ஆர்யாம்பாள் தன் மகன் முதலையிடம் அகப்பட்டு இறப்பதை விட துறவியாக உயிருடன் வாழ்ந்தால் நல்லது என்று நினைத்தார். ''மகனே! நீ துறவியாவ தற்குச் சம்மதிக்கிறேன்.'' என்று கதறிக் கொண்டே சொன்னார்.

அம்மா சொன்னதைக் கேட்ட சங்கரன் முதலையிடமிருந்து விடுபட்டுக் கரையேறினான். ஆர்யாம்பாள் சங்கரனை வீட்டிற்கு வருமாறு அழைத்தார்.

''அம்மா! எது என் இல்லம். இந்த உலகில் உள்ள எல்லா இல்லங்களும் என் இல்லம். உலகில் உள்ள அன்னையர்கள் அனைவரும் என் அன்னை யரே! உலகில் உள்ள சகோதரர்கள் அனைவரும் என் சகோதரர்களே'' என்று கூறினான் சங்கரன்.

''சங்கரா! என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டார் ஆர்யாம்பாள்.

''அம்மா! நான் துறவியாவதற்கு நீங்கள் தானே அனுமதி கொடுத்தீர்கள். துறவிக்கு விடு, வாசல், உற்றார், பெற்றார் என்ற பாசம் ஏது. நான் துறவியாகச் சென்றாலும் உன் உயிர்

பிரிகின்ற சமயத்தில் உன்னிடம் வருவேன். அந்திமக்கிரியையைப் பிள்ளை என்ற முறையில் செய்து முடிப்பேன்'' என்று சொல்லிவிட்டுச் சங்கரன் புறப்பட்டான்.

பெற்ற தாயின் பெரும் அன்பைத் துறந்து உற்ற கருமத்தைச் செய்ய உயர்ந்தோரை நாடினான். சங்கரன் பந்தபாசங்களில் இருந்து தன்னை விடுவித்துக் கொள்ள செய்த முயற்சியில் வெற்றி பெற்றான். பூர்ணா நதிக்குள் தாயின் கட்டளையைப் பெற்றபோது ஆபத் சந்நியாசம் அடைந்துவிட்டான்.

நதியிலே சந்நியாசம் பெற்ற சங்கரன் உரிய குருவிடம் உபதேசம் பெற்று உலகோர் உய்ய வழி காட்டும் உயர்ந்த துறவியாக வேண்டும் என்று நினைத்தான். அந்தத் தெய்வக் குருவைத் தேடி அவன் கால்கள் நடந்தன. முடியாப் பயணத்தைக் கொள்ளும் அவன் கால் நர்மதை ஆற்றங்கரையை அடைந்தது.

சங்கரன் நர்மதை ஆற்றங்கரையை அடைந்த நேரத்தில் ஆற்றில் பெரு வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அனைவருக்கும் உதவ வேண்டிய ஆறு அச்சத்தை உண்டுபண்ணி ஓடுகிறதே. ''இறைவா! இதன் வேகத்தைக் கட்டுப்படுத்து'' என்று இறைவனை வேண்டினான். ஆற்றின் சீற்றம் அடங்கியது.

இளம் சிறுவன் ஒருவன் ஆற்றின் வேகத்தை அடக்கி அமைதியாக ஓடச் செய்த அற்புதத்தைக் கோவிந்த பகவத் பாகவதர் பார்த்தார். அச் சிறுவனின் அருகில் வந்தார். ''அப்பா! நீ யார்? உன் பெயர் என்ன?'' என்று கேட்டார்.

''சுவாமி! என் பெயர் சங்கரன். நான் காலடியிலிருந்து வருகிறேன். உலக சிற்றின்ப வாழ்க்கையை வெறுத்துப் பேரின்ப நெறியை உலகோர்க்கு உபதேசிக்க புறப்பட்டுள்ளேன். என்னைத் தங்கள் சீடனாக ஏற்றுத் துறவற நெறியை உபதேசிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

சங்கரனின் வேண்டுதலைக் கோவிந்த பகவத் பாகவதர் ஏற்றுக் கொண்டார். தலைமுடி நீக்கி காஷாய ஆடையை உடுத்தினார். துறவு மந்திரத்தைச் சொல்லிக் கொடுத்தார். அனைத்தும் கடவுளின் தோற்றமே'' என்று கூறும் மகா வாக்கிய வேத மந்திரத்தைச் சங்கரனுக்குச் சொல்லிக் கொடுத்தார்.

சங்கரன் குரு சொல்லிக் கொடுத்த எல்லா மந்திரங்களையும் கற்றார். குருவுக்கு ஆத்ம சீடராக விளங்கினார்.

''சங்கரா! தன்னைத் தெய்வமாக நினைத்து மக்களை நல்வழிப் படுத்துவதைவிட; சாதாரண

மனிதரைப் போல் இருந்து அன்பு நெறி காட்டி அவர்களை உயர்த்த வேண்டும். அப்போதுதான் மனிதர்களும் தெய்வமாகலாம் என்ற நம்பிக்கை பிறக்கும். அப்பணியைச் செய்'' என்று கட்டளையிட்டார்.

குருவின் கட்டளையை ஏற்று அத்வைத விதியை உலகோர்க்கு உபதேசிக்க சங்கரர் புறப்பட்டார். கோவிந்தர் தன் சீடருக்கு ஆசி வழங்கி விட்டு இமயத்தை நோக்கிப் புறப்பட்டார்.

சங்கரர் புண்ணிய தலமான காசிக்குச் சென்றார். கங்கை ஆற்றங்கரையில் அமர்ந்தார். அத்வைத விதியைப் பிரச்சாரம் செய்தார். சங்கரனைச் சிறுவன் என்று எண்ணி பலமதப் பண்டிதர்கள் ஏளனம் பேசினார்கள். சிலர் அவரிடம் வாதிட வந்தார்கள்.

சங்கரரிடம் வாதிட்ட அனைவரும் தோற்றுப் போனார்கள். பலர் அவருக்குச் சீடரானார்கள். காசிப் பண்டிதர்கள் சங்கரரை 'சங்கராச்சாரியார்' என்று அழைத்தார்கள். 'சங்கர பகவத் பாதர்' என்று போற்றி அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்கள்.

சங்கரர் காசியில் இருந்தபோது பிரம்ம சூத்திரம். உபநிஷதங்கள், கீதை ஆகிய மூன்று நூல்களுக்கும் உரை எழுதினார். இவ்வுரை நூல் பாஷ்யம் எனப்படும். இந்நூல்களின் மூலக் கருத்தை மையமாகக் கொண்டு வேதாந்த நூல்

களை இயற்றினார். அவைகள் 'பிரகரண கிரந் தங்கள்' என்று அழைக்கப்பட்டன.

குழந்தைகளுக்கு ஏற்ற வகையில், கணேச பஞ்சரத்னம்' என்ற பக்தி நூலை இயற்றினார். இந்நூல்கள் இறவாவரம் பெற்று உலகோர்க்கு வழிகாட்ட வேண்டும் என்று இறைவனை வேண் டினார். அந்நூல்கள் அழியாப் புகழுடன் அறிஞர் களால் போற்றப் படுகின்றன.

சங்கரர் காசியில் கோயில் கொண்டுள்ள விசுவ நாதப் பெருமானையும் விசாலாட்சி அம்மையையும் வழிபட்டு வந்தார். அப்பொழுது சோழ நாட்டைச் சேர்ந்த சநந்தனர் என்ற இளைஞர் அங்கு வந் தார். சங்கரரைக் கண்டு அவரிடம் பக்தி கொண் டார். அன்று முதல் அவருக்குச் சீடரானார்.

நரசிம்ம மூர்த்தியிடம் பக்தி கொண்ட சநந் தனைச் சீடராக ஏற்றுக் கொண்டதில் சிலருக்கு ஐயம் ஏற்பட்டது. அதை உணர்ந்து கொண் டார் சங்கரர். சநந்தனரின் பக்தியை உலகோர் அறிய வேண்டும் என்று நினைத்தார்.

கங்கைக்கரையில் சநந்தனர் சங்கரரின் உடை களைத் துவைத்து உலர்த்திக் கொண்டிருந்தார். இக்கரையில் சீடர்களுடன் அமர்ந்துகொண்டிருந்த சங்கரர் அவரைப் பார்த்தார். "சநந்தனா! வா. நான் உடுத்திக் கொண்டிருக்கும் ஆடை ஈரமாகி

விட்டது, நீ வைத்திருக்கும் காய்ந்த ஆடையைக் கொண்டு வா'' என்று அழைத்தார்.

சநந்தனர் குருநாதரின் குரலைக் கேட்டதும் தம்மை மறந்தார். படகில் ஆற்றைக் கடக்க வேண்டும் என்பதையும் மறந்தார். ''குருவே! உங்களுக்கு உலர்ந்த ஆடையைக் கொண்டு வருகிறேன்'' என்று கூறி கங்கையாற்றின் மீது நடந்து வந்தார்.

சநந்தனர் காலடி வைக்கும் தண்ணீரில் பெரிய தாமரை மலர்கள் முளைத்து மலர்ந்தன. அவைகள் மீது சநந்தனர் நடந்து இக்கரைக்கு வந்து சேர்ந்தார்.

இக்கரையில் சங்கரருடன் இருந்த அனைவரும் இக்காட்சியைக் கண்டு வியந்தனர். மலர்களின் மீது பாதங்களை வைத்து நடந்து வந்ததால் சநந்தனரைப் 'பத்ம பாதர்' என்று பெயர் சூட்டி அழைத்தார் சங்கரர். அன்று முதல் சநந்தனரைப் 'பத்ம பாதர்' என்று அனைவரும் அழைத்தனர்.

ஒரு நாள் கங்கையாற்றில் தன் சீடர்களுடன் நீராடி விட்டுச் சங்கரர் வந்து கொண்டிருந்தார். எதிரில் ஒரு புலையனும் புலைச்சியும் நான்கு நாய்களுடன் வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் சீடர்கள் சினம் கொண்டார்கள். ''புலையனே!

எதிரில் வராதே. விலகிப் போ. எட்டிப் போ'' என்று சத்தம் போட்டார்கள்.

சீடர்களைப் பார்த்துப் புலையன் சிரித்தான். அவன் சிரிப்பைப் பார்த்ததும் சீடர்களுக்கு மேலும் கோபம் அதிகரித்தது. ''புலையனே! எட்டிப் போகாமல் ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டார்கள்.

''சுவாமி! அத்வைதம்! அத்வைதம்! என்று பேசுகிறீர்கள். என்னை விலகிப் போகச் சொல்கிறீர்களே எதற்கு?'' என்று கேட்டான்.

அவன் சொன்னதைக் கேட்டு அனைவரும் திகைத்து நின்றார்கள்.

''எல்லாம் சத்தியமான கடவுளின் தோற்றம் தான் என்று கூறுகிறது அத்வைதம். அப்படியானால் நாங்களும் உங்களைப் போலவே சத்தியத்தின் தோற்றமேதான். நமக்குள் உடல் வேறு வேறானாலும் உடலுக்குள் இருக்கும் பரமாத்மா ஒருவர்தான். உடம்பைப் பற்றிய எண்ணத்தை விட்டுப் பரமாத்மாவாக விளங்க வேண்டும்.'' என்றுசொன்னான் புலையன்.

புலையன் பேச்சுக்கு என்ன பதில் சொல்ல வேண்டும் என்று புரியாமல் சீடர்கள் விழித்தார்கள்.

"சுவாமி! உங்கள் உடம்பின் அருகிலிருந்து எங்கள் உடம்பை விலகிப் போகவேண்டும் என்று சொல்வதன் பொருள் என்ன? உங்கள் உடம்புக்குள்ளிருக்கும் ஞான ஒளியிலிருந்து எங்கள் உடம்பிலுள்ள ஞான ஒளி விலக வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் அது அர்த்தமற்றது. ஞான ஒளிகள் அனைத்தும் ஒன்றுதான். தன்னை விட்டுத் தானே எப்படி விலக முடியும்?" என்று புலையன் கேட்டான்.

புலையன் பேசியதைக் கேட்ட சங்கரர் வேத தத்துவத்தின் உட்பொருளை விளக்கிச் சொல்லும் இவன் புலையனாக இருக்க மாட்டான். இறைவனே இத்திருவுரு கொண்டு சோதிக்க வந்துள்ளார்கள் என்று புரிந்து கொண்டார். அவரின் உண்மை சொரூபத்தை அறிய "மனீஷா பஞ்சகம்" என்ற ஐந்து சுலோகங்களைப் பாடினார்.

புலையனாக வந்த இறைவன் சங்கரர் முன் தோன்றினார். புலைச்சியாக இருந்த அம்மையும், நாய்களாக இருந்த வேதங்களும் அவர்முன் காட்சி தந்தன.

"சங்கரா! வேதாந்தம் என்பது வெறும் வாய் பேச்சு அல்ல. வாழ்வில் அதைக் கடைப்பிடித்து. நடத்திக் காட்டவேண்டும். அவ்வாறு நடத்திக் காட்டும் உன் செயலை உலகம் அறியச் செய்யவே

இவ்வாறு இங்கு வந்தோம்.'' என்று கூறி காசி விசுவநாதரும் விசாலாட்சியும் வாழ்த்திவிட்டு மறைந்தார்கள்.

பதினாறு வயது நிரம்பிய சங்கரர்முன் விசுவ நாதரும் விசாலாட்சியும் நேரில் வந்து காட்சி தந்தார்கள் என்ற செய்தியை வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் நம்ப மறுத்தார். சங்கரர் செய்த பிரம்ம சூத்ர பாஷ்யத்தை வாதிட வந்தார்.

இருவருக்கும் வாதம் தொடங்கியது. பிரம்ம சூத்ர பாஷ்யத்திலிருந்து பல ஆட்சேபங்களை எழுப்பினார். சங்கரர் அந்தணர் கேட்ட கேள்வி களுக்கெல்லாம் விடை சொன்னார். விவாதம் நாட்கணக்கில் நடந்தது. முடிவு தெரியவில்லை. கிழவரும் சங்கரரை விடவில்லை.

இருவர் வாதத்தையும் உற்றுக் கேட்ட சநந்தனர் வாதிட வந்தவர் கிழவரல்லர். பிரம்ம சூத்திரத்தில் இப்படிப்பட்ட கேள்விகள் கேட்கும் இவர் இதை இயற்றிய வியாசமுனிவராக இருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டார்.

முடிவில்லா வாதத்தின் உண்மையை உணர்ந்த சங்கரர் கிழவராக வந்திருப்பவர் யார் என்று புரிந்துகொண்டார். ''மகரிஷி! தங்களின் வாதத் திற்கு முன் என் வாக்கு நிலைக்குமா? தங்களை யாரென்று அறியாமல் வாதித்தேன். அடியேனை

வாதிக்குமாறு செய்யலாமா? அபசாரம் செய்து விட்டேன்'' என்று வியாசரை வணங்கினார்.

''பத்மபாத சங்கரரே! என் சுய உருவைக் காட்டினால் நீர் உம் வாதத்திறனைக் காட்டமாட்டாய் என்று நினைத்து மாறுவேடத்துடன் வந்தேன். ஐயனே! நீ பிரம்ம சூத்திரத்துக்குத் தந்துள்ள விளக்கம் உண்மையானது. இந்த உண்மையை நீ நாடு முழுவதும் பிரச்சாரம் செய்ய வேண்டும். உனக்கு இன்றுடன் பதினாறாண்டு நிறைவு பெறுகிறது. இன்னும் பதினாறாண்டுகள் இவ்வுலகில் வாழ்வாய். உன் பிரச்சாரத்தினை நாடு முழுவதும் பரப்புவாயாக'' என்று கூறி வியாச முனிவர் மறைந்தார்.

சங்கரர் காசியில் சில காலம் தங்கியிருந்தார். அவர் பணி அகிலம் முழுமைக்கும் பரவவேண்டும் என்பது ஆண்டவனின் ஆசை. அந்த ஆசை சங்கரரின் எதிரில் ஞான ஒளியாகத் தோன்றியது. அவ்வொளியைத் தொடர்ந்து சென்றார். சிறிது தூரம் சென்றதும் ஒளி மறைந்தது.

''சங்கரா! உன்னுடைய கடமையைச் செய்ய புறப்படு. குமாரிலபட்டர் என்பவர் பிரயாகையில் இருக்கிறார். அப்பண்டிதர் இறக்கும் நிலையில் இருக்கிறார். அவர் அத்வைதத்தை ஏற்றுக்கொள்பவர் அல்லர். நீ அங்குச் சென்று அவரிடம் வாதிட்டு அத்வைதத்தை ஏற்குமாறு செய்ய

வேண்டும். அவ்வாறு செய்தால் அவருடைய சீடர்களும் அத்வைதத்தைத் தழுவுவார்கள்.'' என்றுவானில் அசரீரி சொன்னது.

அசரீரி வாக்கைக் கேட்டதும் சங்கரர் பிரயாகைக்குச் சென்றார். குமாரிலபட்டர் பண்டிதரைச் சந்தித்தார். அவரிடம் அத்வைதத்தைப் பற்றி வாதிட்டார். பதினாறு வயது பாலகனின் சொல் வன்மையையும் வாதத் திறமையையும் கண்டு குமாரிலபட்டர் அதிசயப்பட்டார். இவன் மனிதனல்லன். ஆண்டவனின் அவதாரம் என்று எண்ணினார். சங்கரரின் அத்வைதத்தை மனமார ஏற்றுக்கொண்டார். அவருடைய சீடர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

பௌத்தராக மாறி அம்மத வேதகர்மங்களையும் கருத்துக்களையும் கற்றவர் குமாரிலபட்டர். அவர் அத்வைதத்தை ஏற்றதால் பௌத்தர்களுக்குத் துரோகம் செய்ததாக நினைத்தார்கள். தன்னை அன்புடன் நேசித்த பௌத்தர்களுக்கு வஞ்சகம் செய்துவிட்டதாக எண்ணி வருந்தினார். துரோகச் செயலுக்குத் தண்டனையாகத் தன்னைச் சுற்றி உமியை மலைபோல் குவித்துத் தீமூட்டவேண்டும். அத்தீயில் வெந்து சாகவேண்டும் என்று உயிர்விடத் துணிந்தார். இதுவே துஷாக்னிப் பிரவேசம் என்று சாஸ்திரங்கள் கூறும்.

சங்கரர் இச்செய்தியை அறிந்தார். அவரைக் காண விரைந்தார். அப்பொழுது குமாரிலபட்ட

ரைச் சூழ்ந்து தீ எரிந்து கொண்டிருந்தது. ''குமாரிலரே! பௌத்த தர்மங்களைக் கற்றது சரியே. வாதத்தில் தோற்பது சகஜம். அதற்காக அம்மதக் கொள்கையைக் கண்டிப்பது சரி; தாங்கள் இறப்பதற்கு முன் ஓர் உண்மையைச் சொல்கிறேன் கேளுங்கள்'' உயிரற்ற கர்மம் தானாகப் பலன் தராது. எல்லாக் கர்மாக்களை யும் நெறிபடுத்தும் கடவுளே பலன் தருகிறார். இதுவே அத்வைதம் கூறும் உண்மை. இதைப் புரிந்து கொள்ளுங்கள்'' என்று சொன்னார் சங்கரர்.

''சங்கரரே! உங்கள் கருத்துக்களை ஏற் கிறேன். எல்லாக் கர்மாக்களையும் நெறிபடுத்தும் ஆண்டவனிடம் செல்கிறேன்.'' என்று கூறி தீயில் வெந்து இறந்தார் குமாரிலபட்டர்.

மாஹிஷ்மதி என்ற நகரத்தில் மண்டன மிச்ரர் என்ற பெரும் பண்டிதர் வாழ்ந்து வந்தார். அவ் வூரில் வாழும் பறவைகள் கூட கர்மமீமாம்சை வாசகங்களைச் சொல்லிக் கொண்டிருக்கும். அவ்வூர் பாமரமக்களும் பண்டிதர்களும் மண்டல மிச்ரரின் தாரக மந்திரத்தை ஓதிக் கொண்டிருப் பார்கள்.

சங்கரர் மண்டல மிச்ரரின் புகழைக் கேட்டார். அவரிடம் சென்று வாதிட்டு அத்வைதத்தை ஏற்கச் செய்யவேண்டும் என்று நினைத்தார். அவ்வாறு

செய்தால் தமது வெற்றி நிலைக்கும் என்று உணர்ந் தார். மாஹிஷ்மதி நகரத்திற்குப் புறப்பட்டார்.

சங்கரர் மாஹிஷ்மதி நகரை அடைந்ததும் மண்டன மிச்ரர் வீட்டிற்குச் சென்றார். மண்டன மிச்ரர் வீட்டிற்குள் திதி கொடுத்துக் கொண்டிருந் தார். வீட்டு வாசற் கதவு சாத்தியிருந்தது. வெளி யில் இருந்தவர்கள் அவரை உள்ளே போக அனுமதிக்கவில்லை. சங்கரர் தம் மோன சக்தி யைப் பயன்படுத்தி வீட்டிற்குள் சென்று விட்டார்.

திதி கொடுக்கும் போது சங்கரர் வீட்டிற்குள் வந்ததை மண்டன மிச்ரர் பார்த்தார். கோபத் துடன் சங்கரரைப் பார்த்துப் பல கேள்விகள் கேட் டார். சங்கரர் அக்கேள்விகளுக்குச் சிரித்துக் கொண்டு பதில் சொன்னார்.

தன் கேள்விகளுக்கு அறிவுத் திறமையோடு சங்கரர் பதில் சொன்னதைக் கேட்டதும் மண்டன மிச்ரர் அறிவாளியான இவருடன் வாதம் செய்ய வேண்டும் என்று நினைத்தார்.

“மண்டன மிச்ரரே! என்ன யோசிக்கிறீர் கள்?” என்று சங்கரர் கேட்டார்.

“சங்கரரே! உம்முடன் வாதம் செய்ய நினைக் கிறேன். நம் வாதத்தைக் கேட்டுத் தீர்ப்புச் சொல்ல வேண்டாமா? அதற்கு யாரை நடுவராக

நியமிப்பது என்று யோசிக்கிறேன்.'' என்று மண்டனமிச்ரர் சொன்னார்.

''அன்னை கலைவாணி போல் இருக்கும் தங்கள் மனைவி சகலகலா சரசவாணி நடுவராக இருக்கலாம்'' என்று சொன்னார் சங்கரர். அதற்கு இணக்கம் தெரிவித்தார் மண்டனமிச்ரர்.

''ஐயனே! வயதில் இளைஞராகத் தோற்றம் இருந்தாலும் அறிவில் சிறந்தவராக இருக்கிறீர்கள். உங்கள் இருவரின் வாதத்தைக் கேட்டுத் தீர்ப் பளிக்கும் அறிவு எனக்கில்லை. ஆனால் ஒன்று உங்கள் இருவருக்கும் மாலைகளை அணிவிக் கிறேன். யாருடைய மாலை வாடுகிறதோ அவர் கள் தோற்றதாகக் கொள்ள வேண்டும்'' என்று சொன்னார் சரசவாணி.

''சங்கரா! வாதத்தைத் தொடங்குவதற்குமுன் நான் கூறும் நிபந்தனையைக் கேள். வாதத்தில் நீ தோற்றால் துறவறத்தை மறந்து திருமணம் செய்துகொண்டு எனக்குச் சீடராகி விடவேண்டும். நான் தோற்றால் இல்லறத்தைவிட்டுத் துறவியாகி உனக்குச் சீடராகிறேன்'' என்று மண்டனமிச்ரர் சொன்னார்.

மண்டனமிச்ரரின் நிபந்தனைக்குச் சங்கரர் சம்மதித்தார். இருவருக்கும் வாதம் நடந்தது. மண்டனமிச்ரர் வேதாகமங்களைப் பற்றி பல

கேள்விகள் சங்கரிடம் கேட்டார். அக்கேள்வி களுக்குச் சங்கரர் தயங்காமல் பதில் சொன்னார். சங்கரர் மண்டனமிச்ரரை ஆத்மீக சாஸ்திரங் களைப் பற்றிக் கேட்டார். மண்டனமிச்ரர் பதில் சொல்லாமல் திகைத்தார். அவர் கழுத்தில் இருந்த மாலை வாடியது. தன் தோல்வியை ஒப்புக் கொண்டார்.

சங்கரர் எழுந்து நடந்தார். மண்டனமிச்ரர் அவரைப் பின் தொடர்ந்து சென்றார். சகல கலா சரசவாணி கண்கலங்கி நின்றார். சங்கரர் முன் சென்று, ''சுவாமி! கணவனும் மனைவியும் ஒருயிர் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். உடல் வேறாயினும் உயிரால் ஒன்றிவிட்ட எங்களில் பாதி யைத் தான் நீங்கள் வென்றீர்கள். மற்றொரு பாதியை வெல்ல வேண்டாமா?'' என்று கேட்டார்.

''அம்மையே! நீங்கள் என்னுடன் வாதம் செய்ய தயாராக இருந்தால் நான் உங்களுடன் வாதிட தயாராக இருக்கிறேன்.'' என்று சங்கரர் சொன்னார். அதைக் கேட்ட சகல கலா சரச வாணி வாதம் புரிய சம்மதம் தெரிவித்தார்.

இருவருக்கும் வாதம் தொடங்கியது. சகலகலா சரசவாணி பலசிக்கலான கேள்விகளைச் சங்கர ரிடம் கேட்டார். அக்கேள்விகளுக்கெல்லாம் அற்புத மான விளக்கத்துடன் பதில் சொன்னார் சங்கரர்.

தோல்வி கண்ட சகலகலா சரசவாணி இனி இவ்வுலகில் வாழ்ந்து பலனில்லை என்று நினைத்தார்.

"அன்னையே! அவசரப்பட்டு விபரீத முடிவுக்குச் செல்ல வேண்டாம். இவ்வுலகில் உனக்கு உத்தமமான காரியம் வைத்திருக்கிறேன்" என்று சிரித்துக் கொண்டு சொன்னார் சங்கரர்.

மண்டனமிச்ரர் சுரேசுவரர் என்ற பெயருடன் சங்கரருக்குச் சீடராகிவிட்டார். இதை அறிந்த கர்ம மார்க்கக்காரர்கள் சங்கரரின் சீடரானார்கள்.

உண்மையான அன்பு என்னவென்றால் கடவுளிடம் செலுத்தும் பக்தி. அந்தக் கடவுள் எல்லாருமாய் எங்கும் நிறைந்திருக்கிறார். அன்பு இருந்தால் அவனின்றித் தானில்லை என்ற எண்ணம் வரும் என்ற கருத்தைச் சங்கரர் பரப்பி வந்தார். அதனால் அத்வைதம் வெற்றி பெற்றது. வடதேசம் எங்கும் அவர் புகழ் பரவியது.

சங்கரர் தன் சீடரான சுரேசுவரருடனும் சகல கலா சரச வாணியுடனும் கர்நாடகத்தில் துங்க பத்ரா நதிக்கரையில் உள்ள சிருங்ககிரியை அடைந்தார். சகல கலா சரசவாணி ஆற்றின் மணலில் தயங்கி நின்றார். சங்கரர் அன்னையின் எண்ணத்தை அறிந்தார். அங்கே பீடம் அமைத்தார். அது சிருங்ககிரி சாரதா பீடமாக விளங்கியது.

நாட்டில் அத்வைதம் நிலை பெற வேண்டும் என்று சங்கரர் நினைத்தார். பல இடங்களில் மடங்

களை நிறுவினார். இம்மடங்கள் ஒவ்வொன்றிலும் 'சங்கராசாரியர்' என்று பெயர் கொண்ட ஆசார் யர்களை அமர்த்தினார். அவர்கள் மக்களுக்கு உண்மை வழிகாட்டிகளாக இருந்து நடத்திக் காட்ட வழி வகுத்தார்.

சிருங்ககிரியில் சங்கரர் தங்கியிருந்தபோது, காலடியில் அன்னையின் உயிர் ஊசலாடுவதை ஞானத்தால் உணர்ந்தார். அன்னையை விட்டுப் பிரியும்போது தான் கொடுத்த வாக்கை நினைத் தார். அதை நிறைவேற்ற காலடிக்குச் சென்றார்.

மரணப் படுக்கையில் இருந்த ஆர்யாம்பாள் தன் மகன் சங்கரன்வந்ததைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். அனனையின் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. சங்கரர் திருமாலைக் குறித்துப் பாமாலை பாடினார். பாமாலை முடிந்ததும் அன்னையின் உயிர் பிரிந்தது. தாயைத் தகனம் செய்ய சங்கரர் முன் வந்தார். அதைக் கண்டு உற்றாரும் உறவினர்களும் சென்று விட்டார்கள். சங்கரர் தன் தாயைச் சுமந்துகொண்டு தோட்டத் தில் கிடத்தி உடலுக்குத் தீ மூட்டினார்.

அன்னையின் இறுதிக் கடனை முடித்ததும் சங்கரர் பாரத தேசம் முழுவதும் காலால் நடந்து சென்றார். பல ஆலயங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். ஒரு முறை கர்நாடக நாட்டிலுள்ள மூகாம்பிகை என்ற ஆலயத்திற்கு வந்தார். அம்பிகையின் அருளாசி அனைவருக்கும்

கிடைக்க ஸ்ரீசக்கரத்தை ஏற்படுத்தினார். அவ்வூரில் ஓர் அந்தணரின் மகன் வாய் பேசா ஊமையாக இருந்தான். சங்கரர் அந்த ஊமைக் குழந்தையை, "நீ யார்?" என்று கேட்டார். அக்குழந்தை நான் உடல் அல்ல. எங்கும் பரவியுள்ள சத்யம்தான் நான்" என்று சொன்னது. ஊமையாக இருந்து வாய் பேசிய அக்குழந்தைக்கு 'ஹஸ்தாமலகர்' என்று சங்கரர் பெயர் சூட்டினார்.

சங்கரரின் சீடர்களான பத்மபாதர், சுரேசுவரர், ஹஸ்தாமலகர் யாவரும் கிரியை எள்ளி நகையாடினர். இதை உணர்ந்த சங்கரர் பாஷ்ய பாடம் நடத்தாமல் கிரிக்காகக் காத்துக் கொண்டிருந்தார்.

சீடர்கள் அனைவரும் கிரியை நினைத்து வெறுப்படைந்தனர். கடைசியாக கிரி வந்தார். கையில் ஓலைச்சுவடியை வைத்துக் கொண்டு ஏதோ பாடிக் கொண்டு வந்தார். அந்தப் பாடலைக் கேட்டு அனைவரும் அதிசயித்தார்கள். அப்பாடல் ஸ்ரீ சங்கரரைப் போற்றி எழுதப்பட்டது. தோடக விருத்தத்தில் எழுதப்பட்டதால்'தோடகர்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார்.

சங்கரர் தமிழகத்தில் கால்நடையாக வந்தார். தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவிடை மருதூர்

ஆலயத்திற்குச் சென்றார். கோயிலில் இருந்த சைவப் பண்டிதர்கள் சிவம்தான் உயர்ந்தது என்று வாதிட்டனர். சங்கரர் அவர்களுடன் வாதிட்டார். எது உயர்ந்தது என்று அறிய இறைவன் முன நின்றார்கள். அப்பொழுது 'சத்தியம் அத்வைதம்' என்ற அசரீரி வாக்கு கேட்டது.

அசரீரி கேட்ட சைவப் பெருமக்கள் சங்கருக்குச் சீடரானார்கள். சங்கரர் அங்கு ஒரு மடத்தை நிறுவினார். அங்கிருந்து சிதம்பரத்திற்குச் சென்றார். அங்குப் பதஞ்சலியிடமிருந்து வடமொழி இலக்கணம் கற்றார். சிவபெருமானின் அருளைப் பெற 'பஞ்சாட்சர யந்திரம்' பாடினார். வறுமை நீங்கி வளமுடன் வாழ 'அன்னா கர்ஷண யந்திரம்' பாடினார்.

திருஆனைக்காவுக்குச் சென்று அகிலாண்ட பரமேஸ்வரியை வணங்கினார். ஸ்ரீ சக்கர வடிவில் அமைந்த தாடகங்களை அகிலாண்டேஸ்வரிக்கு அணிவித்தார். திருச்செந்தூர் சென்று முருகப் பெருமானை வழிபட்டார். 'சுப்ரமண்ய புஜங்கம்' என்ற துதிப்பாடலைப் பாடினார்.

சங்கரர் ஜகந்நாதபுரி நகரத்திற்குச் சென்றார். அப்புண்ணியபதியில் ஒரு மடத்தை நிறுவினார். அம்மடத்திற்குப் பத்மபாதரை ஆசாரியராக அமர்த்தினார். கிருஷ்ண ஸ்தலமான துவார

கைச் சென்று ஒரு மடம் நிறுவினார். அதில் ஹஸ்தாமலகரை ஆசாரியராக நியமித்தார்.

ஸ்ரீரங்கம் சென்று திருஅரங்கநாதனைத் தரிசித்தார். அங்கிருந்து திருப்பதிக்குச் சென்றார். திருவேங்கடப் பெருமானை நினைத்து மனமுருகி ‘விஷ்ணு பாதாதி, கேசாந்த ஸ்தோத்திரத்தை இயற்றிப் பாடினார். திருமலை திருப்பதியில் மக்களை ஈர்க்கும் ஒரு யந்திரத்தை ஸ்தாபித்தார். அன்றிலிருந்து அப்பெருமானுக்கு நித்திய உற்சவமாக மக்கள் தரிசிக்க வருகிறார்கள்.

பாரத நாட்டிலுள்ள பன்னிரண்டு ஜோதிலிங்க பதிகளுக்குச் சென்றார். அங்குள்ள இறைவனை வணங்கினார். எல்லா இறைவனையும் சேர்த்து, ‘‘த்வாதச ஜ்யோதிர்லிங்க ஸ்தோத்திரம்’’ இயற்றினார்.

ஆந்திர தேசத்தில் உள்ள ஸ்ரீசைலத்தில் எழுந்தருளியிருக்கும். மல்லிகார்ஜுனப் பெருமானைக் கண்டதும் உள்ளம் உருகி, ‘‘சிவாநத்த லஹரி’’ என்னும் நூறு சுலோகங்கள் கொண்ட பக்திப் பாடலை இயற்றினார்.

ஸ்ரீசைலத்தை அடுத்த ஹாடகேசுவரம் என்ற இடத்தில் சங்கரர் தியானம் செய்து கொண்டிருந்தார். அப்போது கிர்கசன் என்ற காபாலிகத் தலைவன் சங்கரரிடம் சென்று, ‘‘ஐயனே! உங்

களைக் காபாலிக்குப் பலி கொடுக்க சம்மதம் தாருங்கள்'' என்று கேட்டான்.

தியானத்தில் இருந்த சங்கரர் மகிழ்ச்சியுடன் சம்மதம் தந்தார். காபாலிகன் சங்கரின் தலையை வெட்ட வாளை ஓங்கினான். அந்த சமயத்தில் பத்மபாதர் நரசிம்மமூர்த்தியின் ஆவேசத்துடன் அங்கு வந்தார். சங்கரரின் தலையை வெட்ட இருந்த காபாலிகன் மீது பாய்ந்தார். அவன் உடலைக் கிழித்துப் போட்டார். சங்கரர் பத்ம பாதரைச் சாந்தி செய்தார்.

பிறகு சங்கரர் அஹோபிலத்துக்குச் சென்றார். அங்குள்ள இறைவனை வழிபட்டார். தலம் தல மாகச் சென்று இறைவனை வழிபட்டார். வடக்கே இமயமலைப் பகுதியில் பதரீவனம், பதரிகாசிரமம் ஆகிய புண்ணிய தலங்களுக்குச் சென்றார். அலகநந்தா நதிப் படுகையில் சாந்நித்தியம் கொண்ட விக்கிரகம் புதைத்திருந்தது. அதை எடுத்து ஆலயத்தில் வைத்துப் பிரதிஷ்டை செய் தார். அது பத்ரிநாராயணம் என்று உலகமெல் லாம் கொண்டாடும் மூர்த்தியாகும்.

புனித யாத்திரையை மேற்கொண்ட சங்கரர் கேதார நாத்திற்கு வந்து சேர்ந்தார். உமையுடன் வீற்றிருக்கும் சிவபெருமானைத் தரிசித்தார். அப் பெருமானின் அருளைப் பெற்றார். ''சிவனை நினைத்துச்'' சிவபாதாதி கேசாந்த ஸ்தோத்

திரம்'' எனவும் ''சிவகேசாசி பாதாந்த ஸ்தோத்திரம்'' என இரு ஸ்தோத்திரங்களைப் பாடினார். சங்கரர் பாடலைக் கேட்ட இறைவன் பஞ்சலிங்கங்களைச் சங்கரருக்கு வழங்கினார். சிவபெருமான் அருகில் இருந்த உமையம்மையைப் பார்த்தார். ஆனந்தக் களிப்பால் அவரால் பாட முடியவில்லை. இறைவன் அருட்பார்வை கிடைத்தது. ''சௌந்தர்ய லஹரி'' என்ற நூலை இயற்றினார்.

கைலாயத்திலிருந்து நேபாளத்திற்குச் சென்றார். அங்குச் சங்கரருக்கு அரச மரியாதை அளிக்கப்பட்டது. பசுபதிநாத்திற்குச் சென்றார். இறைவனை வணங்கிப் பேரின்பம் அடைந்தார். குஹ்யேச்வரி என்ற சக்தி பீடத்தைச் சங்கரர் வணங்கினார்.

நேபாளத்தில் உள்ள நீலகண்ட தலத்தில் தாம் பெற்ற ஐந்து லிங்கங்களில் ஒன்றான வர லிங்கத்தை அவ்வாலயத்தில் பிரதிஷ்டை செய்தார். அங்கிருந்து புறப்பட்டுக் கேதாரிநாதம் வந்தார். ஐந்து லிங்கங்களுள் இரண்டாவதான முக்தி லிங்கத்தைக் கேதாரி நாதத்தில் பிரதிஷ்டை செய்தார்.

பாரதத்தின் வடகோடியிலிருந்து புறப்பட்டு அத்வைதத்தைப் பரப்பிக் கொண்டு சிதம்பரம் வந்து சேர்ந்தார். அங்கே பஞ்ச லிங்கங்களில் மூன்றாவதான மோட்சலிங்கத்தைப் பிரதிஷ்டை

செய்தார். சிருங்ககிரிக்குச் சென்று போகலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார்.

காஞ்சியம்பதிக்குச் சங்கரர் சென்றார். விசுவேசுவரர் ஆலயத்தில் தங்கினார். காமாட்சி அம்மையின் அருளால் ''காமகோடி பீடம்'' என்ற மகத்தான சக்தி பீடத்தை ஏற்படுத்தினார். அவ்வூரை தமக்கென மையமான மடத்தை ஏற்படுத்திக் கொண்டார். அங்கு யோக லிங்கத்தைத் தனது பூஜைக்கென வைத்துக் கொண்டார்.

சங்கரர் காஞ்சியில் இருந்தபோது பல மத பண்டிதர்களிடம் வாதிட்டு வென்றார். எல்லா தெய்வங்களும் ஒன்றே என்ற கொள்கையை நிலை நாட்டினார். ''ஜெய ஜெய சங்கரா'' என்று மக்களும் பண்டிதர்களும் போற்றி வணங்கினார்கள்.

சங்காருக்கு முப்பத்திரண்டு வயது நிறைவு பெற்றது. இதற்குள் பாரத நாட்டைக் கால்நடையாக நான்கு முறை சுற்றி வந்தார். பக்தி என்னும் கவசமேந்தி அன்பு, அடக்கம், பணிவு இவைகளைத் துணையாகக் கொண்டு பலவகை சம''மென்னும் கடலைக் கடந்தார். அத்வைதம் என்ற ஞான ஒளியைக் காட்டி மக்களைக் கரை சேர்த்தார்.

சமயத்தின் நாயகன், சான்றோர்கள் வணங்கிப் போற்றும் பூமகன், எழில் கொஞ்சும்

இந்திய நாட்டின் இணையில்லாப் பெருமகன் ஐயனின் அருளால் அவதரித்த சங்கரன்.

கலைமகளும் பூமகளும் போற்ற, தன் பாதங்களால் புவி அளந்த கோமகன் ஆண்டவன் கட்டளைப்படி அந்திமகாலத்தை அடையும் நேரத்திற்காகக் காத்திருந்தார்.

சங்கரர் தம் முப்பத்திரெண்டாம் வயதில் தன் பணி முடிந்துவிட்டது என்று நினைத்தார். காமாட்சி அன்னையிடம் சென்றார். "திரிபுர சுந்தரி வேத பாதஸ்வதம்" என்ற ஒப்பற்ற பாடலால் அன்னையைப் பாடி வணங்கினார். பாடல் முடியும்போது சங்கரரின் வாழ்வும் முடிந்து விட்டது. ஞானப் பேரொளி விண்ணில் காட்சி தந்தது.

"ஜெய ஜெய சங்கரா!"

## வாதவூரடிகள்
### (மாணிக்கவாசகர்)

'சோழநாடு சோறுடைத்து' என்றும் 'வேழம் உடைத்து மலை நாடு' என்றும் 'முத்து டைத்து பாண்டிய நாடு' என்றும் முடி மன்னர் மூவர் ஆண்ட நாடுகளைச் சிறப்பித்துக் கூறினார் கள் சான்றோர்.

பாண்டிய நாடு முத்துடைத்தது மட்டுமல்ல. முச்சங்கம் நிறுவி, முத்தமிழ் வளர்த்த பெருமை உடையது. இப்பாண்டிய நாட்டில் வையை என்னும் பொய்யாப் புனல்யாறு பாய்ந்தோடு கிறது. அவ்வாற்றங்கரையில் திருவாதவூர் என்ற பழம்பதி உள்ளது. அவ்வூரில் சைவ சின்னத்தை மெய்யில் தாங்கி, ஐந்தெழுத்து மந்திரத்தை அகத்தில் வைத்து அனுதினம் நடக்கும் அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு அருமை மகனாக திருவாதவூரார் அவதரித்தார்.

வாதவூராருக்கு ஐந்து வயதானதும் கல்வி கற்க ஆசானிடம் அனுப்பினார் தந்தையார். குருவிடம்

வாதவூரர் கற்பன கற்றார். கேட்பன கேட்டுத் தெளிவுபெற்றார். குருவின் குறிப்பறிந்து நடந்தார்.

தமிழ் இலக்கண இலக்கியத்தை இளம் வயதில் ஓதி உணர்ந்தார். மாணவன் அறிவாற்றலைக் கண்டு ஆசான் அகம் மகிழ்ந்தார். கலையறிவு ஏற, வயதும் பதினாறாகியது.

வாதவூரர் அறிவின் திறமை எங்கும் பரவியது. 'அறிவுடையோனை அரசனும் சாரும்' என்ற சொல்லுக்கு ஏற்ப அரிமர்த்தன பாண்டியன் செவிக்கு வாதவூரர் புகழ் எட்டியது. மன்னன் மதியுடையோரை அருகில் இருக்கச் செய்ய நினைத்தான்.

காவலனை அழைத்தான். வாதவூரரை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். காவலன் கடிகிச் சென்று வாதவூரரைக் கண்டான். மன்னன் அழைப்பைச் சொன்னான். வாதவூரர் அழைப்பை ஏற்றுப் பாண்டியனிடம் சென்றார்.

அரிமர்த்தன பாண்டியன் வாதவூரரின் அறிவைப் பலவகையிலும் சோதித்தான். வாதவூரர் எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினார். மன்னன் வாதவூரரைப் பாராட்டி தென்னவன் பிரம்மராயன்' என்ற பட்டத்தை வழங்கினான். பாண்டியன் அவையில் முதன்மை அமைச்சராக்கினான்.

ஆண்டுகள் சென்றன. வாதவூராரின் நல்லொழுக்கம் நற்பண்புகளால் பாண்டியன் அரசியல் அல்லல் இன்றி அமைதியாக நடந்தது.

வாதவூரார் அரசியல் வாழ்வால் அளவிலாச் செல்வம் படைத்தார். இன்ப வாழ்வைக் கண்டார். இவைகள் இருந்தும் அவர் உள்ளத்தில் ஏதோ ஓர் அச்சம் இருந்தது. அதைப் போக்கும் வழி தெரியாது நீறுபூத்த நெருப்புபோல் இருந்தார்.

அரிமர்த்தன பாண்டியனுக்கு வாதவூரார்மீது அன்பும் மதிப்பும் ஏற்பட்டது. அவருடைய அரசியல் அறிவையும் செயல் திறமையையும் கண்டு வியந்தான். வாதவூரார் எப்பணி செய்யினும் அப்பணி குறைவின்றி விரைவில் முடித்து நின்றார். அதனால் அரசுப் பணி எதுவானாலும் வாதவூரரைக் கலந்து அரசன் செய்தான். அரசனின் எண்ணம் வாதவூரரைச் சுற்றியது. வாதவூரார் எண்ணம் அவர் வாழ்வை நினைத்தது.

ஒருநாள் குதிரைப்படை காவலன் அரசனைக் காண வந்தான். “அரசே! குதிரைப் படையில் குதிரைகள் குறைந்து விட்டன. அதனை நிறைவு செய்தாலன்றி பகைவர்களை வெல்ல முடியாது. நால்வகை படைக்குள் குதிரைப் படை உயிர் போன்றது.” என்று கூறினான் படைக் காவலன்.

அரிமர்த்தன பாண்டியன் குதிரைப் படை தளபதி சொன்ன கருத்தினை ஆய்ந்து பார்த்தான்.

குதிரைப் படையின் அவசியத்தை உணர்ந்தான். படையில் குறைந்துள்ள குதிரைகளை வாங்கி நிறைவு செய்ய நினைத்தான். முதலமைச்சராகிய வாதவூரரை அழைத்தான். குதிரைப்படை தளபதி சொன்னதை அவருடன் கலந்தாலோசித்தான். வாதவூரர் ''அரசே! குதிரைகளை வாங்குவதற்கு இது நல்ல சமயம்'' என்று சொன்னார்.

''வாதவூரரே! குதிரைகளைக் கண்டு தேர்வு செய்யும் தகுதி படைத்தலைவருக்கு அடுத்து உமக்கு உண்டு. கொடுத்த பணியைக் குறைவின்றி திறமையுடன் முடிக்கும் ஆற்றலும் பெற்றவர் தாங்கள். அதனால் குதிரையை வாங்கிவர தாங்கள் தான் செல்லவேண்டும்'' என்று சொன்னான் அரசன்.

அரசரின் வேண்டுகோளைக் கேட்ட வாதவூரர் குதிரையை வாங்கிவர சம்மதித்தார். அரசர் பெரும் பொருளை எடுத்து அவரிடம் கொடுத்தார். வாதவூரர் அப்பொருளை வாங்கிக் கொண்டு குதிரைகளை வாங்கிவரப் புறப்பட்டார். அரசன் அகம்மகிழ வழியனுப்பி வைத்தான்.

வாதவூரர் குதிரைகளை வாங்கச் செல்லும் வழியில் திருப்பெருந்துறையை அடைந்தார். அங்குக் குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருக்கும் ஈசனை வணங்கினார். அன்று இரவு அவ்வாலயத்தில் தங்கினார். 'அரகர' என்று முழங்கிக்கொண்டு சிவனடியார்கள் கூட்டம் அங்கு வந்து தங்கின.

வாதவூரர் சிவனடியார்களைப் பார்த்தார். மெய்யெல்லாம் திருநீறு பூசியிருந்தார்கள். வாயெல்லாம் சிவநாமத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சிவனடியார்களின் கூட்டத்தின் நடுவில் குருமூர்த்தி வீற்றிருப்பதைப் பார்த்தார். காந்தத்தைக் கண்ட இரும்புபோல் அவர் மனம் குருமூர்த்தியிடம் சென்றது.

இறைவா! என் மனக் கவலையைப் போக்கும் மருந்து இதுவென்று காட்டிவிட்டாய். மாயப் பிறப்பறுக்கும் விமலனே! உன் கருணையைப் புரிந்து கொண்டேன். என்று கூறிக்கொண்டே சிவனடியார்களின் கூட்டத்தை விளக்கிக்கொண்டு ஓடினார். குருமூர்த்தியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

''அப்பனே! எழுந்திரு. உன்னைப் பார்த்தால் அரசாங்க அமைச்சர்போல் தெரிகிறது. நீ யார்? எங்குச் செல்கிறாய்?'' என்று கேட்டார் குருமூர்த்தி.

''மெய்யன்பர் மூர்த்தியே! தாங்கள் கூறியபடி நான் பாண்டிய மன்னரின் அமைச்சர் வாதவூரன் என்பது என் பெயர். பொதி பணம் கொண்டு பரி வாங்கப் புறப்பட்டேன். வழியில் தங்களைக் கண்டேன். என்னை ஆட்கொள்ள வேண்டும்.'' என்று வேண்டினார்.

குருமூர்த்தி வாதவூரரை உற்றுப் பார்த்தார். ''உலக பந்தத்தில் கட்டுண்ட உன்னால் அவை களை விட்டு விலகி வரமுடியுமா?'' என்று கேட் டார்.

''அய்யனே! மெய்நெறி அறியாது இதுநாள் வரை இருந்தேன். பொய்யான வாழ்க்கையை விட்டு உய்யும் வழி தெரிந்துவிட்டது. எனக்கு ஞானோபதேசம் செய்யுங்கள்'' என்று வேண்டி னார், வாதவூரர்.

''வாதவூரரே! உனக்கு நான் ஞானோப தேசம் செய்ய வேண்டும் என்றால் கொண்டு வந்த செல்வங்களைச் சிவாலயப் பணிக்குச் செலவிடும்'' என்று சொன்னார் குருமூர்த்தி.

குருமூர்த்தி சொன்னதைக் கேட்டதும் குதிரை வாங்க கொண்டு வந்த செல்வங்கள் அனைத்தை யும் அறப்பணிக்குச் செலவிட ஆணையிட்டார். அறப்பணி தொடர்ந்து நடந்தன. வாதவூரர் வந்த வேலையை மறந்தார். அறத் தொண்டில் உள்ளத் தைச் செலுத்தினார்.

நாட்கள் சென்றன. குதிரை வாங்கச் சென்ற அமைச்சர் பாண்டிய நாடு திரும்பி வராததை எண்ணி மன்னன் மருண்டார். காவலர்களை அழைத்தார் ''வாதவூரரைத் தேடிக்கண்டு பிடியுங் கள் குதிரை வாங்கி விட்டாரா என்று தெரிந்து வாருங்கள்.'' என்று கட்டளை இட்டார்.

காவலர்கள் வாதவூரரைத் தேடிக்கொண்டு திருப்பெருந்துறைக்கு வந்தார்கள். அங்கே அவர் கண்ட காட்சி அவர்களைத் திடுக்கிட வைத்தது. அமைச்சராக வந்த வாதவூரர் அடியார்களுடன் அடியாராக அறப்பணி செய்வதைக் கண்டார்கள். அரசர் குதிரை வாங்க கொடுத்த பெருஞ் செல்வத்தைக் கொண்டு கோயில் கட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.

காவலர்கள் வாதவூரரிடம் சென்றார்கள். அரசன் கட்டளையைச் சொன்னார்கள். அதைக் கேட்ட வாதவூரர் அவர்களுக்குத் தக்க பதில் கூறாமல் ஆண்டவன் நிலையைக் கூறினார். அஞ்ஞான இருளில் கிடக்கும் அவர்கள் மெய்ஞ்ஞான உபதேசம் கேட்டு வெறுத்தனர். அரசனிடம் சென்று பார்த்ததைச் சொன்னார்கள்.

அரிமர்த்தன பாண்டியன் வாதவூரரின் செயலைக் கேட்டு கோபம் அடைந்தான். அறிவு நலம் பெற்ற அமைச்சரா அரச செல்வத்தைப் பாழாக்குவது என்று நினைத்தான். வாதவூரரைப் பாண்டிய நாட்டிற்கு வருமாறு ஓலை அனுப்பினான்.

அரசனின் அழைப்பைக் கண்டதும் வாதவூரர் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார். சிவபெருமானிடம் முறையிட்டார். அடியார்க்கு ஆபத்தில் உதவும் ஐயன் வாதவூரரிடம் விலை மதிக்கமுடியாத மாணிக்கம் ஒன்றைக் கொடுத்தார்.

“இதைக் கொண்டு சென்று அரசனிடம் கொடு” என்று சொன்னார்.

“ஐயனே! அரசன் கொடுத்த பொருளுக்கு இதைக் கொடுக்கலாம். நான் குதிரை வாங்கி வரு கிறேன் என்று சொல்லிவிட்டு வந்ததற்கு என்ன செய்வது?” என்று மனம் வருந்திக் கேட்டார் வாதவூரர்.

“வாங்கிய குதிரைகள் வந்து சேரும்.” என்று சொல்லுங்கள்” என்று ஐயன் சொன்னார்.

வாதவூரர் மாணிக்கத்தை எடுத்துக் கொண்டு மன்னரிடம் சென்றார். தன்னிடம் இருந்த மாணிக் கத்தை அரசரிடம் கொடுத்தார்.

அரசர் வாதவூரர் கொடுத்த மாணிக்கத்தை வாங்கிக் கொண்டார். “அமைச்சரே! குதிரைகள் எங்கே?” என்று கேட்டார்.

“அரசே! குதிரைகள் வரும்” என்று வாதவூரர் சொன்னார்.

வாதவூரரின் வாக்கில் நம்பிக்கையற்ற பாண்டியன் தன் ஒற்றர்களை அனுப்பினான். வாதவூரர் சொன்னபடி குதிரைகள் பாண்டிய நாட்டிற்கு வருமா? என்று கேட்டார்.

ஒற்றர்கள் திருப்பெருந்துறை சென்றார்கள். உண்மையை அறிந்து வந்தார்கள். “அரசே! குதிரைகள் வரும் என்று வாதவூரர் சொன்னது

பொய். குதிரைகள் வராது'' என்று சொன்னார்கள்.

ஒற்றர்கள் சொன்னதைக் கேட்டு அரசன் சினம் கொண்டான். குதிரைகள் வரும் என்று அமைச்சர் பொய் சொல்லலாமா? பக்தன் போல் நடித்து வாதவூரர் ஏமாற்ற நினைக்கிறார். இவரைச் சும்மா விடக் கூடாது என்றுகோபப்பட்டு வாதவூரரைச் சிறையில் அடைத்தான். கடுமையான தண்டனை வழங்கினான். இதை அறிந்த இறைவன் நரிகளைப் பரிகளாக்கிப் பாண்டியன் மன்னனிடம் ஒப்படைத்தார்.

பகலில் குதிரைகளாக ஒப்படைத்த குதிரைகள் இரவில் நரிகளாக மாறி விட்டன. அவைகள் ஊளையிட்டுக் கத்தின. அருகில் இருந்த குதிரைகள் நரிகளின் கூச்சலைக் கேட்டு மிரண்டன. இதை அறிந்த மன்னர் வாதவூரரை வைகையாற்றின் சுடுமணலிடைக் கொண்டு செல்லுமாறு கட்டளையிட்டான். அங்கு அவரை நிறுத்தி உடல் தழும்பு ஏற சவுக்கால் அடிக்கக் கட்டளையிட்டான்.

இரக்கமற்ற மன்னனின் ஆணையை நிறைவேற்ற கொலைஞர்கள் வந்தனர். வாதவூரரை அடித்தார்கள். வாதவூரர் சிவ சிவ என்று கூறி அடிகளைப் பொறுத்துக் கொண்டார். ஆண்டவர் அரசனின் இச்செயலை வெறுத்தார். ஆற்றில்

பெரும் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடும்படிச் செய்தார்.

ஆற்றின் கரையோரத்தில் இருந்த ஊர்களும் மரங்களும் ஆற்று வெள்ளத்தில் அடித்துச் சென்றன. மக்கள் மன்னன் முன் வந்து மனத் துயரைக் கூறினார்கள். வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று முறையிட்டார்கள்.

மன்னனும் மந்திரிகளும் கூடி வீட்டுக்கோர் ஆள் ஆற்றின் வெள்ளத்தைத் தடுத்து அணை போட வரவேண்டும். என்று முரசு அறைந்தனர். மன்னனின் ஆணையைக் கேட்ட மக்கள் வெள்ளத்தை நிறுத்த திரண்டனர்.

மதுரையில் பிட்டு விற்கும் வயது முதிர்ந்த வந்தி என்னும் வாணிச்சி அரசனின் ஆணையை நிறைவேற்ற எண்ணினாள். தன் முதுமைப் பருவத்தை நினைத்தாள். ஆற்றின் கரையை மண் சுமந்து எப்படி அடைப்பது என்று எண்ணி ஏங்கினாள்.

இறைவன் கூலியாளாக உருக் கொண்டு பிட்டு வாணிச்சி முன்வந்து நின்றார். வந்தி கூலியாளைப் பார்த்ததும் மகிழ்ச்சி கொண்டாள். பணியாளனே! ஆற்றின் வெள்ளத்தால் உடை பட்ட கரையை அடைக்க வேண்டும். அதற்கு வீட்டிற்கோர் ஆள் அனுப்ப வேண்டும் என்று அரசன் ஆணைபிறப் பித்துள்ளான். என் கடனை நிறைவேற்றுகிறாயா?

அதற்குக் கூலியாக உனக்கு வயிறு நிறைய பிட்டு கொடுக்கிறேன்'' என்று கூறினாள் கிழவி.

வந்தியின் சொல்லுக்குக் கட்டுப்பட்ட இறைவன் கூலிக்கு மண் சுமந்தார். சிறிது நேரம் வேலை செய்துவிட்டு வந்தியிடம் வந்தார். பிட்டை வாங்கி வயிறு நிறைய உண்டார். ஒரு மரத்தடியில் சென்று படுத்து உறங்கினார்.

மற்றவர்கள் தங்கள் பங்கினைச் செவ்வனே முடித்து விட்டார்கள். ஆனால் பிட்டு வாணிச்சி வந்தியின் பங்கு நிறைவுபெறாமல் அதன் வழியே வெள்ள நீர் ஓடிக்கொண்டிருந்தது. காவலர்கள் பார்த்தார்கள்.

காவலர்கள் அரசரிடம் சென்று கண்ணால் கண்டதைச் சொன்னார்கள். அரசன் கோபத்து டன் ஆற்றங்கரைக்கு வந்தான். பிட்டு வந்தியை அழைத்தான். வந்தி நடந்ததை அரசனிடம் சொன்னாள். அதைக் கேட்ட அரசன் ''எங்கே உன் கூலியாள்?'' என்று கோபமாகக் கேட்டான்.

காவலர்கள் மரத்தடியில் உறங்கிக் கொண் டிருக்கும் கூலியாளைக் காட்டினார்கள். அரசன் அவன் அருகில் சென்றான். கூலியாளை எழுப்பி னான். அவன் எழுந்து நின்றதும் கையிலிருந்த சவுக்கால் ஓர் அடிக் கொடுத்தான். அந்த அடி அவன் முதுகிலும் மற்ற எல்லா உயிர்களின் முதுகிலும் பட்டது.

அடிப்பட்ட அரசன் அறிவு தெளிந்தது. அறியாமையால் சிவனடியார்களின் பெருமையை அறிந்து கொள்ளாமல் இருந்தேன். ஆணவத்தால் வாதவூரரை வதைத்துத் துன்பப்படுத்தினேன். என்று உணர்ந்தான்.

வாதவூரடிகளிடம் ஓடினான். அவரைக் கண்டு வணங்கினான். தன் தவறை மன்னிக்கும் படி கேட்டான் அரசன். மீண்டும் முதலமைச்சராக வந்து அவரை அரசு நடத்த வேண்டும் என்று வேண்டினான்.

வாதவூரடிகள் அரசன் செயலைப் பொறுத்து மன்னித்தார். அறிவு பெற்று மனம் திருந்தியதைக் கண்டு மகிழ்ந்தார். "மன்னா! உன் வேண்டு கோளை என்னால் நிறைவேற்ற முடியாது." என்று கூறி அமைச்சியலைத் துறந்தார்.

வாதவூரடிகள் மதுரையினின்றும் புறப்பட்டு, திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர், முதலிய தலங் களுங்குச் சென்றார். அங்குள்ள இறைவனை வணங்கிப் பதிகங்கள் பாடினார்.

திருவாதவூரடிகளிடம் வாதிட புத்தர்கள் தில்லையில் வந்து காத்திருந்தார்கள். அதை அறிந்த திருவாதவூரர் தில்லைக்குச் சென்றார். அங்கு வாழ்ந்த அந்தணர்களோடு சேர்ந்து புத்தர் களிடம் வாதிடச் சென்றார்.

திருவாதவூரடிகளுக்கும் புத்தர்களுக்கும் சமய வாதம் நடந்தது. கடும் வாதத்தின் முடிவில் புத்தர்கள் தோற்றார்கள். வாதவூரர் வென்றார்.

சிலகாலம் திருவாதவூரர் தில்லையில் தங்கியிருந்தார். அப்பொழுது திருவாசகம், திருக்கோவையார் இரண்டையும் பாடி முடித்தார். இறைவன் அருட்செயல் இதுவென அந்தணர்கள் வாழ்த்தினர். வாதவூர் அடிகள் தம் முப்பத்திரண்டாம் ஆண்டில் அம்பலவாணர் அடியினைச் சேர்ந்தார்!

## சூடிக் கொடுத்த சுடர்க்கொடி

### ஆண்டாள்

---

தமிழகத்தில் உள்ள திருமாலின் தலங்களில் பக்தி மணம் கமழும்; தெய்வமணம் வீசும்; கல்வி மணம் ஒளி வீசும்; கொடை மணம் பரிமளிக்கும். இத்தலங்களில் ஒன்று வில்லிபுத்தூர்.

வில்லிபுத்தூரில் முகுந்தாசாரியார் பதுமையார் என்னும் தம்பதிகள் வாழ்ந்து வந்தார்கள். அவர் கள் பிள்ளை வரம் வேண்டி பெருமானிடம் வேண் டினார்கள். அத்திருமாலின் திருவருளால் விஷ்ணு சித்தர் என்னும் மைந்தர் பிறந்தார்.

விஷ்ணு சித்தர் இளம் வயதில் கலை பலவும் கற்றார். தந்தை காட்டிய பக்தி நெறியைக் கைக் கொண்டார். திருமாலின் திருநாமத்தை, ‘‘மாதவனே! மதி சூதனனே!! மாயவனே!!. மாலவனே!!!! மணிவண்ணா!!!!’’ என்று போற்றித் துதித்தார்.

விஷ்ணுசித்தர் தினமும் மாலவன் மீது பாமாலை சூட்டினார். தினமும் இறைவனுக்கும்

பாமாலை சூட்டுவது மட்டும் போதாது. பூமாலை தொடுத்துச் சாத்த வேண்டும் என்று எண்ணினார். அதற்காகப் பெரிய தோட்டத்தை அமைத்தார். அதில் மலரும் நாள் மலர்களைப் பறித்துப் பூமாலை தொடுத்தார். திருமாலுக்கு அம்மாலை யைச் சாத்தினார்.

பூந்தோட்டத்தின் ஒரு பகுதியில் துளசி வனம் ஏற்படுத்தினார். விஷ்ணுசித்தரின் பக்தியும், அருட்குணத்தையும் கண்டவர்கள் புகழ்ந்து பாராட்டிப் பேசினார்கள்.

திருமாலின் அன்பரான விஷ்ணுசித்தருக்கு மனக்குறை இருந்தது. அதைத் தினமும் திருமா லின் திருவடிகளில் வைத்தார். ''மாலவனே! எனக்கொரு மகப்பேறு கிட்டவில்லையே! என் மனைவியின் மனக்குறையைப் போக்க வழி யில்லையா?'' என்று வேண்டினார்.

தோட்டத்தில் பறிக்கும் மலர்களை மாலை யாகத் தொடுத்து வில்லிபுத்தூரில் எழுந்தருளி யிருக்கும் வட பத்திரசாயிக்குச் சாத்துவார். மனம், வாக்கு, காயம் மூன்றையும் பரமன்பால் இருத்தி நெஞ்சுருகிக் கண்ணீர் விட்டு வேண்டினார்.

மறுநாள் காலைக் கதிரவன் உலக இருளைப் போக்கி ஒளியைக் காட்டிக் கொண்டு வானவீதிக்கு வந்தான். விஷ்ணுசித்தர் துளசி வனத்துள்

அவசரமாகப் பூக்கூடையுடன் நுழைந்தார். துளசிச் செடியின் அருகில் ஒரு பச்சைக் குழந்தை இருப்பதைப் பார்த்தார். உள்ளத்தில் உவகை கொண்டு அக்குழந்தையை அன்போடு எடுத்துக் கொண்டார்.

துளசி வனத்தைச் சுற்றிப் பார்த்தார். ஒருவரும் இல்லை. அப்போது ''அன்பனே! உன் மனம் மகப்பேறு கருதி அலைந்தது. உன் மனைவியின் மனமும் கவலையுற்றிருந்தது. இக் குழந்தையை ஏற்று இதற்குக் கோதை என்று பெயர் சூட்டி வளர்ப்பீர்களாக.'' என்று அசரீரி வாக்குக் கேட்டது.

''இது பெண் குழந்தை திருமாலின் பேருளால் கிடைத்தது. இக்குழந்தையைத் திருமாலின் சந்நிதிக்கு எடுத்துச் செல்வேன். என்று நினைத்து இறைவன் சந்நிதியைச் சேர்ந்தார். ஆண்டவன் திருமுன் கிடத்தினார்.

திருமாலின் தெய்வ அருள் வேண்டி நின்றார். பிறகு குழந்தையை எடுத்துக் கொண்டு தமது மனைவியிடம் வந்தார். நடந்ததை எல்லாம் அவளிடம் சொன்னார்.

விஷ்ணுசித்தரின் மனைவி குழந்தையை அன்போடு வாங்கினார். மார்போடு அணைத்து முத்தமிட்டார். உழுகலப்பையின் அடியில் திரு

மகள் சீதாதேவியாக வந்ததுபோல் துளசி வனத்தில் பூமாதேவி கோதையாக அவதரித்திருக்கிறாள் என்று எண்ணி இறைவனை வணங்கினார்.

கோதை சின்னஞ்சிறு பெண்ணாக இருந்தபோது ஊரில் உள்ளார் அனைவரும் வந்து பார்த்தனர். கோதையின் களங்கமற்ற மதிமுகத்தையும், அவள் பேசும் பிள்ளை மொழியையும் கண்டு வியந்தார்கள். எல்லார் உள்ளத்தையும் கோதை அன்பால் ஆட்கொண்டாள். அதனால் அனைவரும் கோதையை ஆண்டாள் என்று அழைத்தனர்.

விஷ்ணுசித்தராகிய பட்டர் கோதைக்கு ஐந்து வயது ஆனதும் கல்வி கற்பிக்கத் தொடங்கினார். ஞானம் ஊட்டும் பக்திக் கதைகளைச் சொன்னார். தெய்வ மணம் கமழ கோதைக்குத் தெய்வத்தின் நூல்களை ஓதி உணர்த்தினார.

கோதை தந்தையிடம் பக்திக் கதைகளைக் கேட்க தினம் தினம் ஆவலோடு வருவாள். அவர் சொன்ன தெய்வக் கதைகளை மீண்டும் கூறும்படிக் கேட்பாள். கற்றதையும் கேட்டதையும் மனதில் இறுத்திக் கொள்வாள். அதன்படி நடக்க வேண்டும் என்று நினைத்து நடந்தாள்.

தந்தை வாயிலாகக் கற்ற கல்வியால் சகலகலா வல்லி என்று அனைவரும் புகழும்படி சிறுவயதில்

பெயர் பெற்றாள். அதைக் கேட்டுப் பட்டர் சிந்தை மகிழ்ந்தார்.

கோதை காலையில் தந்தையுடன் மலர் வனம் செல்வாள். மலர் பறிப்பாள். அம்மலர்களை மாலையாகத் தொடுத்துத் தந்தையிடம் கொடுப்பாள். மகள் கொடுத்த மலர்மாலையை வாங்கியதும் பட்டர் திருமாலின் திருவிளையாடல்களைச் சொல்வார். அவைகளைக் கோதை கேட்டுக் கேட்டு ஆண்டவன் மீது அளவிலாத அன்பு ஏற்பட்டது. எல்லோருக்கும் நேரில் வந்து காட்சி தந்த எம்பெருமான் எனக்கு நேரில் வந்து எப்பொழுது காட்சி தருவார் என்று ஏங்கினாள்.

திருமாலின் அவதாரங்களை விளக்கும் நூல்களை விரும்பிப் படித்து வந்தாள். தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தலை சிறந்து விளங்கினாள். ஞானமும் கல்வியும் கோதையிடம் வளர வளர அவள் வயதும் வளர்ந்தது. கோதைமங்கைப் பருவம் எய்தினாள். அவள் உருவம் அழகுடன் பொலிந்தது.

கோதை மங்கைப் பருவம் அடைந்த பின் வீட்டை விட்டு வெளியில் செல்லவில்லை. தந்தையுடன் பூப்பறிக்க நந்தவனம் போவதில்லை. வீட்டிற்குள்ளிருந்தாள். திருமாலின் திருவிளையாடல்களையும் கல்யாண குணங்களையும் விளக்கமாகத் தெரிந்துகொள்ள பாரதம், பாகவதம் முதலிய காவியங்களைக் கற்றாள்.

தினமும் இறைவனை நினைத்துக் கோதை ஏங்கினாள். திருமாலை நேரில் காண ஆசை கொண்டாள். இரவிலும் பகலிலும்; கனவிலும் நனவிலும் இறைவனையே நினைத்து உருகினாள்.

''இறைவா! என் கண்களோ! உன்பேரழகைக் காண தேடுகிறது. என் மனமோ! உன் இன்பமய மான நினைவுகளை நினைத்து மகிழ்கின்றது. கரிய திருமேனி படைத்த கண்ணா! என் கண்முன் வாராயோ.'' என்று கூறுவாள்.

ஒவ்வொரு நாளும் இவ்வாறு இறைவனை நினைத்துப் பேசிப் பேசி மகிழ்வாள். திருமாலை நினைத்துத் தொழுவாள். துடிதுடிப்புக் கொள் வாள். துதித்துப் பாடுவாள். மாலை நேரம் ஆனதும் தந்தை மாலையைத் தொடுத்துப் பூக் கூடையில் வைத்து விட்டுச் சென்றதும் மாலை யைப் பார்ப்பாள். தன்னை ஆடை அணிகலன் களால் அலங்கரித்துக் கொள்வாள். அந்த மாலையை எடுத்துக் கழுத்தில் சூட்டிக் கொண்டு மகிழ்வாள்.

''பரந்தாமா! உன்னையே என் கணவராக மனத்தால் நினைக்கிறேன். உனக்குரிய மாலையை நான் அணிந்து கொள்கிறேன். என் ஆசை நிறைவேற வேண்டும். என்னை நீ கை விட்டு விடுவாயோ'' என்று நெஞ்சுருகி தனக்குள் பேசிக் கொள்வாள்.

தந்தை வரும் நேரம் அறிந்ததும் அந்த மாலையைக் கழற்றி முன்போல் பூக்கூடையில் வைத்து விடுவாள். பட்டர் வழக்கம்போல் பூக் கூடையை எடுத்துக் கொண்டு ஆலயத்துக்குச் செல்வார்.

பட்டர் வழக்கம் போல் அந்த மலையை வட பத்திரருக்குச் சாத்தினார். அம் மாலையின் மணம் நெடுந்தூரம் வீசியது. மாலை என்றுமில்லாது இன்று மணம் வீசுவது அறிந்து யாவரும் வியந்தனர்.

தினம் தினம் பட்டர் தொடுத்து வைக்கும் மாலையைக் கோதை இரகசியமாக அணிந்து அழகு பார்த்தாள். அதைக் கழுத்தில் அணியும் போதெல்லாம் திருமால் தனக்கு மாலை அணிவித்த தாக எண்ணிமகிழ்வாள். பிறகு மாலையைக் கழற்றி கூடையில் வைத்து விடுவாள். வீட்டில் நடப்பதை அறியாதபட்டர் அம்மாலையை எம்பெருமானுக்குச் சாற்றுவார். மாலையின் மணம் எங்கும் பரவும். எல்லோரும் அதன் மணத்தைக் கண்டு அதிசயித் தார்கள்.

ஆண்டாள் தான் சூடிக் கொடுத்த மாலையை ஆண்டவனுக்குச் சாத்தி விட்டுப் பட்டர் வந்ததும் மாலையைப் பற்றிக் கேட்பாள். பட்டர் மாலை அணிவித்த பின் ஆண்டவனின் கல்யாண கோலத்தைத் தன் மகளிடம் கூறுவார். அதைக்

கேட்டதும் ஆண்டவனை நாயகனாக அடையும் நாள் நெருங்கி விட்டது என்று எண்ணினாள். தன்னை மறந்தாள். உள்ளம் தடுமாறினாள். ஆண்டவனை நாயகனாக அடைந்து விட்டதாக எண்ணி ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினாள்.

ஒரு நாள் வழக்கம் போல் பெரியாழ்வார் மாலையுடன் விரைவாக ஆலயத்திற்குச் சென் றார். அவசர அவசரமாக மாலையை எடுத்து அர்ச்சகரிடம் கொடுத்தார். அர்ச்சகர் அம் மாலை யைக் கையில் வாங்கினார். "பட்டரே! பரமனுக் குச் சாத்தும் மாலையில் பாவையின் நீண்ட தலை முடியிருக்கிறது. அபச்சாரம். இம் மாலையை ஆண்டவனுக்குச் சாத்த முடியாது" என்று திருப்பிக் கொடுத்து விட்டார்.

"பரந்தாமா! இது என்ன சோதனை. இது நாள்வரை நான் கொடுத்து வந்த மாலையில் எந்த விதக் குறையும் இல்லை. இன்று ஏதோ நடந்து விட்டது. என் பிழையைப் பொறுத்தருளும் என்று மனதுக்குள் பட்டர் வேண்டிக் கொண்டார். அர்ச்சகர் கொடுத்த மாலையை வாங்கிக் கொண் டார். வீட்டிற்கு வந்து புதிய மாலையைத் தொடுத்து ஆண்டவனுக்குச் சாத்தினார்.

அன்று இரவு முழுவதும் பட்டர் உறங்க வில்லை. தன் பழுதற்ற பக்திக்குப் பங்கம் வந்து விட்டதே என்று மனக்கவலை கொண்டார். மாலை

யில் மயிர் எப்படி வந்தது? என்று கண்டுபிடிக்க வேண்டும் என்று முடிவு செய்தார்.

மறுநாள் வழக்கம் போல் மாலையைக் கட்டி கூடையில் வைத்தார். வெளியில் செல்வது போல் சென்று வீட்டில் ஒளிந்து கொண்டார். ஆண்டாள் தந்தை சென்று விட்டார் என்று நினைத்து வழக்க மாகச் செய்வது போல் தன்னை அலங்கரித்துக் கொண்டு மாலையைக் கழுத்தில் அணிந்து அழகு பார்த்தாள். ஆண்டவனின் ஆயிரம் நாமங்களை உச்சரித்தாள். குற்றமற்ற இறைவன் மீது காதல் கொண்டு பிதற்றினாள்.

மறைவில் இருந்து பார்த்துக் கொண்டிருந்த பட்டர் மகளின் மனநிலையைப் புரிந்து கொண் டார். இறைவன் இவள் காதலை ஏற்பாரோ? மனிதப் பெண் இவள். பரந்தாமனை நாயகனாகப் பெறுவது எங்ஙனம்? பேதைப் பெண் இவள். ஏதோ பிதற்றுகிறாள் என்று எண்ணினார்.

“ஆண்டாள்! அறிவிலார் செய்யும் செயலை நீ செய்யலாமா? பரமனுக்குச் சாத்தும் மாலையை பாவை உன் கழுத்தில் அணியலாமா? அபச்சாரம்! அபச்சாரம்.” என்று கடிந்து கொள்பவர் போல் நடித்தார் பெரியாழ்வார்.

தன் செயலைத் தந்தை தெரிந்து கொண் டார் என்று ஆண்டாள் பயந்தாள். கழுத்தில்

அணிந்திருந்த மாலையை அவசரமாகக் கழற்றிக் கூடையில் வைத்தாள். கண்களில் நீர் வழிய வாடிய முகத்துடன் நின்றாள்.

''ஆண்டாள்! உனக்குத் திருமணம் செய்து அழகு பார்க்க எண்ணினேன். உன் எண்ணம் வேறாக இருக்கிறது. பல நூல்களைக் கற்ற நீ இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யலாமா? ஆண்டவன் பணியில் அபச்சாரத்தை உண்டாக்கி விட்டாயே'' என்று அறிவுரை சொல்வது போல் கோபித்தார்.

தந்தையின் கோபத்தை உணர்ந்த ஆண்டாள் வாய் திறந்து பேசாமல் மௌனமாக நின்றாள். பெரியாழ்வார் தோட்டத்திற்குச் சென்றார். மலர் களைப் பறித்து மாலை தொடுத்தார். புதிய மாலை யைப் பெருமானுக்குச் சாத்தினார். மன நிம்மதி யுடன் வீடு வந்து சேர்ந்தார்.

அன்று இரவு நாராயணன் அவர் கனவில் தோன்றி, ''பக்தரே! கோதை சூடிய மாலை ஏன் சூட்டவில்லை. கோதை யார் தெரியுமா? அவள் பூமாதேவி. அவள் எம்மீது பாமாலையும் பூமாலை யும் தொடுத்து வருகிறாள். அவள் சூடிக் கொடுத்த மாலையை எமக்குச் சாத்தவேண்டும்.'' என்று கூறினார்.

பெரியாழ்வார் கனவில் உரைத்த எம் பெருமான் கோயில் அர்ச்சகர் கனவிலும் இவ்

விதமே உரைத்தார். வைணவ பக்தர்கள் கனவி லும் இவ்வாறே நாராயணன் உரைத்தார்.

மறுநாள் காலையில் அனைவரும் ஒருவரை ஒருவர் சந்தித்தனர். தாம் தாம் கனவில் கண்ட தைக் கூறிக் கொண்டனர். எல்லோரும் சேர்ந்து பெரியாழ்வார் இல்லத்திற்குச் சென்றார்கள். தங்கள் கனவில் நாராயணன் கூறியதைச் சொன் னார்கள்.

நாராயணரின் அருள்வாக்கை அனைவரும் உணர்ந்த பின் கோதையிடம் சென்றார்கள். அவளைப் பணிந்து ''நாரணன் ஆட்கொண்ட நங்கையே! இன்று முதல் உன் பெயர் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி'' என வழங்கும் என்று உரைத்தனர்.

பெரியாழ்வார் அன்று முதல் தொடுக்கும் மாலையைக் கோதையிடம் கொடுப்பார். அதை வாங்கி அவள் அணிந்த பின் கொடுப்பாள். அதனை எடுத்துச் சென்று ஆண்டவனுக்குச் சாத்துவார்.

நாட்கள் சென்றன. பெரியாழ்வார் தன் மகளுக்கு மணம் முடிக்க ஏற்பாடுகள் செய்தார். கோதைக்கு ஏற்ற கணவர் எவரும் கிடைக்க வில்லை. பெரியாழ்வார் அதை நினைத்துக் கவலை கொண்டார்.

தந்தையின் மனக் கவலையை அறிந்த கோதை, ''அப்பா! மணமகன் மனிதனாக இருந்தால் அவரை மணந்து கொள்ள மாட்டேன். என் மனதில் இதுநாள் வரை நினைத்துக் கொண்டிருக்கும் பரந்தாமனாக இருந்தால் மணந்து கொள்வேன்'' என்று சொன்னாள்.

''கோதை! நாம் மனிதராகப் பிறந்துள்ளோம். மனிதனாக வரும் மணமகனை மணக்க மாட்டேன் என்று மறுத்தால் உனக்குத் திருமணம் எப்படி நடக்கும்?'' என்று கேட்டார் பெரியாழ்வார்.

''அப்பா! என் உள்ளத்தில் ஆண்டவனை நாயகனாக அடைந்து விட்டேன். அதில் மனிதர்களுக்கு இடமில்லை'' என்று சொன்னாள் ஆண்டாள்.

''கோதை! திருமாலின் திருத்தலங்கள் நூற்றெட்டு உள்ளன. அவற்றில் வெவ்வேறு பெயர்களில் வீற்றிருக்கிறார் பெருமான். உன் உள்ளத்தில் நாயகனாக ஏற்றுக் கொண்ட அவதார புருஷன் யார்?'' என்று கேட்டார் பெரியாழ்வார்.

''அப்பா! நூற்றெட்டுத் திருத்தலங்களில் உள்ள எம்பெருமான் சிறப்புக்களைக் கூறுங்கள். அதில் என் நாயகன் எங்குள்ளார் என்று கூறுகிறேன்'' என்று சொன்னாள் ஆண்டாள்.

பெரியாழ்வார் திருஅட்டபுயகரம் முதல் திரு வைகுந்த விண்ணகரம் வரை உள்ள தலங்களில் எழுந்தருளியுள்ள பரமனின் சிறப்புக்களைக் கூறி னார்.

“அப்பா! வட மதுரையில் உள்ள கண்ண னின் செயல் என் உடலைப் புல்லரிக்கச் செய்தது. திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள வேங்கடா சலபதியின் பெருமையைக் கேட்டு என் உள்ளமும் முகமும் மலர்ந்தது. திருமாலிருஞ்சோலையில் வீற்றிருக்கும் அழகரது அருங்குணங்களைக் கேட்டு என் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கியது. திருவரங்க நாதனின் பெருமையைக் கேட்டதும் ஆண்டாள் மெய்மறந்தாள். தன் மனத்தில் உள்ள நாயகன் அப்பெருமான்” என்று கூறினாள்.

ஆண்டாள் திரு அரங்கநாதனை நினைத்து மனம் உருகினாள். நினைப்பெல்லாம் அப்பெரு மானைப் பற்றி நினைத்தாள். செயலெல்லாம் அவரை நினைத்துச் செய்தாள். தினமும் பாடிப் பரவசமாகிக் களித்தாள். அரங்கநாதனை அன்றி வேறு நினைவு இல்லாமல் இருந்தாள்.

ஒரு நாள் இரவு ஆண்டாளின் கனவில் திரு மால் வந்து தன்னை மணந்ததாகக் கனாக் கண் டாள். பொழுது விடிந்ததும் தன் தோழியிடம் அதைப் பற்றி “வாரணம் ஆயிரம் சூழ வலம் செய்து” என்று பாடித் தனக்கும் நாராயண

னுக்கும் திருமணம் நடந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தாள்.

நாட்கள் பல சென்றன. நாரணன் மீது பக்தி நாளுக்கு நாள் வளர்ந்தது. நந்தவனம் சென்றாள். அங்குக் குயிலைக் கண்டாள். மாதவனை அழைத்துவரக் கூவுவாய் குயிலே என்று பாடினாள். மேகங்களைக் கண்டு தன் எண்ணத்தையும் வாட்டத்தையும் நாரணனிடம் கூறுங்கள் என்று பாடினாள். மலர்களைப் பார்த்து நான் படும் பாட்டை அவரிடம் உரையுங்கள் என்று பாடினாள். வண்டுகளைப் பார்த்து அரங்கரிடம் விரைந்து சென்று என் துயரைக் கூறுங்கள் என்று பாடினாள்.

ஆண்டாள் இவ்வாறு தினமும் தெய்வத் திருமணத்தைப் பற்றி கனவு கண்டாள். காணும் பொருட்களை எல்லாம் தன் காதலை அற்விக்க வேண்டினாள்.

ஆண்டாள் அரங்கருக்குத் தூதுவிட்டபின் மனம் அமைதி அடையவில்லை. அதனால் பாவை நோன்பு நோற்றால். ஊரிலுள்ள கன்னியரை அழைத்துக் கொண்டு நோன்பின் மகிமையைப் பாடி நோற்றாள். மார்கழி மாதத்தில் பாடி நோன்பு நோற்ற அப்பாடல் திருப்பாவை என சிறப்புடன் போற்றப் படுகிறது.

ஆண்டாள் நோன்பு நோற்றபின் "அப்பா! அடியார்களைக் காக்கவே பத்து அவதாரங்கள் ஆண்டவன் எடுத்தார். என் துன்பத்தினைப் போக்கி அருள் செய்வதும் அவர் கடமையல்லவா? அரங்கனை நேரில் சென்று சேவிக்க விரும்பு கிறேன். அன்னையும் தந்தையும் உற்றாரும் இருக்க தனி வழியே சென்றாள் என்னும் சொல் வந்த பின் பழியை நீக்குவது அரிது. நான் அங்குச்சென்றால் அரங்கனை நேரில் காண்பேன். என்னை அங்கு அழைத்துச் செல்லுங்கள்." என்று சொன்னாள்.

ஆண்டாளின் பக்தியை அறிந்த பெரியாழ் வார் என்ன செய்வது என்று புரியாமல் ஏங்கி னார். மகளை எப்படித் திரு அரங்கத்திற்கு அழைத்துச் செல்வது என்று திகைத்தார். எம்பெருமானை வேண்டி உள்ளம் உருகினார். யானைக்கு அபயம் அளித்த கருணாமூர்த்தி ஆழ்வாரின் கனவில் தோன்றி ஆண்டாளைத் திருவரங்கம் அழைத்து வருமாறு சொன்னார்.

திரு அரங்கத்தில் உள்ள அர்ச்சகர் வைணவப் பக்தர்கள் பரிசாரகர் ஆகியோர் கனவில் தோன்றி "மங்கல வாத்தியங்களுடன் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாள் திருப்பாவையை அழைத்து வாருங்கள்" என்று சொன்னார்.

மறுநாள் கோயில் பரிவாரங்கள் ஸ்ரீவில்லி புத்தூரை அடைந்தார்கள். பெரியாழ்வாரிடம் கூறினார்கள். பெரியாழ்வாரும் ஆண்டாளும் திருவரங்கத்திற்குப் புறப்பட்டார்கள். பாண்டியன் வல்லப தேவன் இச் செய்தியை அறிந்தான். திருவரங்கநகர் முழுவதும் பூப்பந்தல் போட்டான். ஆண்டாள் வரும் வழி நெடுகிலும் பூப்பந்தல் போடச் செய்தான்.

நவரத்ன பல்லக்கில் ஆண்டாளை அமர்த்தி திருவரங்க நகரை வலம் வந்தார்கள். ஆண்டாளை வாழ்த்திப் பக்தர்கள் வாழ்த்தொலி எழுப்பினர். ஆண்டாள் பல்லக்கை விட்டுக் கீழே இறங்கினாள். அத்தலத்தில் மெதுவாக நடந்து சென்றாள்.

பாண்டியனும் பெரியாழ்வாரும் பின்னால் சென்றார்கள். அனைவரும் இறைவன் சந்நிதி சேர்ந்தார்கள். ஆண்டாள் ஆண்டவன் திருப் பாதத்தில் வீழ்ந்து வணங்கினாள். ஆண்டவனின் பேரொளி தெரிந்தது. ஆண்டாள் அதில் கலந்து திருமாலடி சேர்ந்தாள். அக்காட்சியைப் பெரியாழ் வாரும் பாண்டியனும் மக்களும் கண்டு வணங் கினார்கள்.

# பெரியாழ்வார்

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வார் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். கருடாம்சராய்த் தோன்றியவர் என்று வைணவர்களால் போற்றிப் புகழப்படுவர். இவர் தென்பாண்டி நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் என்ற ஊரில் வைணவகுலத் திலகராய் வேயர்குலச் சீலராய் வேதப்பொருள் வல்லவராய் விளங்கிய முகுந்த பட்டருக்கும் பத்மா என்ற அம்மைக்கும் ஐந்தாவது மகனாய் அவதரித்தார்.

பெற்றோர்கள் குழந்தை பிறந்த நேரத்தைக் கணித்து விஷ்ணுசித்தர் என்னும் பெயரைச் சூட்டி அழைத்தார்கள். விஷ்ணுசித்தருக்கு ஐந்து வயதானது. அந்தணர்க்குரிய பூணூல் அணிவித்தனர். வேதாகமங்களைக் கற்றுத் தந்தனர்.

விஷ்ணுசித்தர் எம்பெருமான் திருவிளையாடல்களைப் பற்றி கற்றுணர்ந்தார். திருமாலின் திருவவதாரம் பத்தையும் படித்துத் தெளிந்தார்.

எல்லோரும் போற்றும் சிறந்த வைஷ்ணவ பக்த ராகத் திகழ்ந்தார்.

விஷ்ணுசித்தருக்குத் திருமணம் செய்ய முகுந்த பட்டர் நினைத்தார். மகனுக்கேற்ற மங்கையைத் தேடி மணம் முடித்தார். விஷ்ணு சித்தரின் இல்லற வாழ்வு இனிது நடந்து வந்தது.

வில்லிப்புத்தூரில் எழுந்தருளியுள்ள வடபெருங் கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானுக்குத் தொண்டு செய்வதில் ஊக்கம் உடையவரானார். அப்பெருமானுக்கு எவ்வாறு தொண்டு செய்வது என்று எண்ணினார். இறைவனுக்கு மாலை சாத்தி வழிபடுவதே அரிய தொண்டு என்று நினைத்தார். அதற்காக ஒரு பெரிய நந்த வனத்தை அமைத்தார். அதில் மலரும் மலர் களைப் பறித்து மாலை தொடுத்தார். அம்மாலையை இறைவன் கழுத்தில் அணிவித்து அகம் மகிழ்ந்தார்.

இவ்வாறு இறைவழிபாட்டில் ஈடுபட்டிருந்து இறைவன் திருநாமத்தை ஓதினார். விஷ்ணு சித்தரின் மனைவியும் கணவர் குறிப்பறிந்து கடமையைச் செய்து வந்தார்.

பாண்டிய மன்னன் வல்லபதேவன் ஒரு நாள் நகர சோதனை வந்தான். ஒரு வீட்டுத்திண்ணை

யில் உறங்கிக் கொண்டிருந்த அந்தணனை எழுப்பி ''நீ யார்?'' என்று கேட்டான்.

''அரசே! நான் வட நாடெல்லாம் சுற்றி இறைவனைத் தரிசித்து வருகிறேன். கங்கை முதல் புனித நதிகளில் நீராடி வருகிறேன்'' என்று சொன்னான்.

அரசன் அவனை உற்றுப் பார்த்தான். உனக்குத் தெரிந்த நல்ல சுலோகம் ஒன்றைச் சொல்'' என்று கேட்டான். அந்தணன் ''மழை காலமாகிய நான்கு மாதங்களிலும் இன்புற்று வாழ்வதற்காக எட்டு மாதங்களிலும் முயலக் கடவன். முதுமைப் பருவத்தில் பாடுபடக் கடவன். மறுப்பிறப்பில் இன்பம் அடைவதற்காக இப்பிறப்பில் முயலக்கடவன்'' என்று பொருள் கொண்ட சுலோகத்தைச் சொன்னான்.

எல்லாச் செல்வங்களையும் நலமுடன் பெற்ற பாண்டியன் வல்லபன் பரமார்த்த தத்துவத்தைப் பற்றி சிந்தித்தான். அதன் உண்மைப் பொருளை அறிய ஆவல் கொண்டான். சகல சாஸ்திரங் களையும் கற்றவரான செல்வநம்பியை அழைத் தான். அவரிடம் மறுமையில் இன்பம் பெறும் மார்க்கத்தை உபதேசிக்க வேண்டும்.'' என்று வேண்டினான்.

''அரசே! நாடெங்கிலுமுள்ள பண்டிதர்களுக் கும் வித்துவான்களுக்கும் பரம்பொருளின் உண்

மையை உரைப்போர்க்கும் பொன் முடிப்பு வழங்கப் படும்.'' என்று பறைச்சாற்றுங்கள்'' என்று சொன்னார் செல்வநம்பியார்.

செல்வநம்பியார் கூறியபடியே பாண்டியன் அவையில் பண முடிப்பு வைத்துப் பறை அறிவித்தான். நாடெங்கிலும் உள்ள பல மதப் பண்டிதர்கள் வந்து பரம்பொருளின் உண்மையை உரைத்தனர். ஆனால் அவைகளை அரசனின் உள்ளம் ஏற்கவில்லை.

வில்லிபுத்தூரில் உள்ள வடபெருங்கோயிலுடையான் விஷ்ணுசித்தரின் கனவில் தோன்றி, ''நீர் பாண்டியன் அவைக்குச் சென்று தத்துவார்த்தப் பரம்பொருளின் உண்மையை விளக்கி பண முடிப்பைப் பெற்று வாரும்'' என்று கூறி மறைந்தார்.

விஷ்ணுசித்தர் காலையில் எழுந்தார். இரவில் கண்ட கனவை நினைத்தார். எதிரில் பாண்டியன் பரிவாரங்கள் பல்லக்குடன் வந்து காத்திருந்தனர். பல்லக்கில் ஏறி உட்கார்ந்தார். பாண்டிய மன்னன் அவைக்குச் சென்றடைந்தார்.

செல்வநம்பியார் விஷ்ணுசித்தரை வரவேற்றார். ''ஐயனே! தாங்கள் பரதத்துவ மெய்ப்பொருளின் உண்மையை அருள வேண்டும்'' என்று கூறினார்கள். அதைக் கேட்ட விஷ்ணுசித்தர் உள்ளங்கை

நெல்லிக்கனிபோல் எம்பெருமான் அருளால் புராண இதிகாசம் காட்டி அவைகளின் அர்த்தங்களையும் விளக்கமாகக் கூறினார். வைணவ மதம் உயர்ந்ததென்றும் மாயப்பிறப்பறுக்கும் மாலவன் பாதத்தைச் சரண் அடைவதே சிறந்த வழி என்றும் விரிவுரையாற்றினார்.

வல்லபதேவனும் செல்வநம்பியும் விஷ்ணுசித்தரின் அரிய விளக்கவுரையைக் கேட்டு ஆனந்தமடைந்தார்கள். அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினரர்கள். பொற்கிழியை அறுத்து அருளினார்கள். அவரை யானைமேல் அமர்த்தி நகர் வலம் வந்தார்கள். பட்டர்பிரான் என்ற பட்டத்தைச் சூட்டினார்கள்.

யானை மீது அமர்ந்த பட்டர்பிரான் யானை மணியைத் தாளமாகக்கொண்டு ''பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்'' என்ற திருப்பல்லாண்டு பாடினார்.

பணமுடிப்பைப் பெற்ற பட்டர்பிரான் வில்லிபுத்தூர் வந்து சேர்ந்தார். வடபெருங் கோயிலுடையானுக்கு வழக்கம் போல் மலர் மாலை சாத்தி வந்தார். திருமாலின் கிருஷ்ணாவதாரத்தைநினைத்து பெரியாழ்வார் திருமொழி என்ற பாடலைப் பாடினார். அன்று முதல் பெரியாழ்வார் என்ற பெயரால் அழைத்தனர்.

பெரியாழ்வார் கிருஷ்ணாவதாரச் சிறப்புகளை 612 பாசுரங்களில் பாடி மகிழ்ந்தார். திருப்பாதாதி கசவண்ணம், திருத்தாலாட்டு, அம்புலிப் பருவத்தில் யசோதை சந்திரனைக் கண்ணனிடம் விளையாடுமாறு அழைப்பது போன்று பாடுகிறார்.

பெரியாழ்வார் கண்ணனை நினைத்துப் பாடும்போது ''கண்ணா! உலகங்களெல்லாம் பிரளயங்களால் அழிவுறாதபடி இருந்து காத்தவன். ஆலிலை மேல் கண் உறங்கிய கருணை வள்ளல். யுகம் தோறும் அவதாரம் எடுத்து அநீதிகளை அழித்து உலகில் நீதியை நிலைபெறச் செய்பவன். இப்படிப்பட்ட உன்னைச் சிறுவன் என்று எண்ணலாமா? வானத்து அம்புலியே வையத்தை வாழ வைக்கும் மாயச் சிறுவனோடு மனங்கலந்து ஆடவா. அதனால் உனக்குத்தான் பெருமை.'' என்று உள்ளம் உருகி கார்மேக வண்ணனைப் பாடுகிறார்.

பாண்டவர்க்குத் தூது சென்ற நாயகனை இராமனாகக் காணும்போது சனகராசன் வைத்த சிவதனுசை மன்னாதி மன்னர்களெல்லாம் முயன்றும் முறிக்காமல் சென்றார்கள். அப்படிப்பட்ட சிவதனுசை மன்னர்கள் மனம் வெட்கப் படும் படியும், தேவர்கள் மகிழும்படியும் எடுத்து முறித்தாய். கரிய கூந்தலை உடைய அன்னையைக் கடிமணம் செய்துகொண்டார்.

"அரச குல திலகனான பரசுராமன் இராமர் மணந்து கொண்டதை அறிந்து மனம் வெகுண்டு இராமரை நடுவழியில் தடுத்தார். அரிய தவத்தை யுடைய பரசுராமன் கையில் இருந்த விஷ்ணு தனுசை வாங்கி அவன் தவத்தை எல்லாம் வாங்கி அவன் ஆணவத்தை அழித்ததும் நின் அவதாரப் புண்ணியமன்றோ" என்று இராமாவதாரச் சிறப் பைப் பாடினார்.

இவ்வாறு பெரியாழ்வார் கிருஷ்ணாவதாரச் சிறப்பையும் இராமாவதாரச் சிறப்பையும் புகழ்ந்து பாடுகிறார். சீதையை இராவணன் தூக்கிச் சென்று அசோகவனத்தில் சிறை வைத்ததையும், இராம தூதனாக வந்த அனுமன் கணையாழியைக் கொடுத்து மகிழ்வித்த செய்திகளை எல்லாம் ஆழ்வார் பாடி மகிழ்வித்தார்.

பெரியாழ்வார் எம்பெருமான் அருள் தன்னை ஆட்கொள்ள வேண்டும் என்று நினைத்து அவருடைய திருவுளத்தைத் தனக்கு இருப்பிட மாகக் கொண்டருள வேண்டும் என்று வேண்டி னார். நோய்கள் தம்மை அணுகாதபடி காக்க வேண்டும் என்று பாசுரங்கள் பாடி வேண்டினார்.

இருளை நீக்கும் ஒளிபோல் குணங்களும் உடைய திரு வேங்கட மலையில் எழுந்தருளியிருக் கின்ற ஏழு மலையானை நினைத்து உள்ளம்

உருகி ''உலகத்தவர்களை வாழ்விக்கும் நிறை குணம் உடையவனே! தாமோதரனே! அடியார் களின் குற்றங்களைப் பொறுத்து ஆள்பவனே! எமக்கு உன் கருணையைக் காட்டுவாய். உன்னு டைய பேரருளை நம்பி அடியேன் உயிர் வாழ் கிறேன்'' என்று பாடிப் பரவசப் பட்டார் பெரி யாழ்வார். இவரால் எடுத்து வளர்க்கப்பட்ட ஆண்டாள், இவர் காட்டிய பக்தி நெறியைக் கடைபிடித்துப் பலரும் போற்றி வணங்கும் பேறு பெற்றாள்.

திருமால் மீது தீராப் பேரன்பு கொண்ட பெரியாழ்வார் தமது இறுதி நாளில் திருமாலுருஞ் சோலையில் மாலவன் மணிவண்ணன் பாதத்தில் சேர்ந்தார்.

# திருமங்கையாழ்வார்

'வான் பொய்ப்பினும் தான் பொய்யா குலக் கொடி' என்று புலவர்களால் போற்றப்படும் காவிரி பாயும் நாடு சோழ நாடு. பல்வளமும் பயன் அறனும் முறை செய்யும் மனு நீதியும் கொண்ட அந்த நாட்டில் திருமங்கை என்னும் குறுநில நாடு உள்ளது. இந்நாட்டில் திருக்குறையலூர் என்ற ஊரில் கள்ளர் குடியில் சோழ மன்னனுக்குப் படைத் தலைவராய் இருந்தவருக்கு மகனாகப் பிறந்தார்.

பிறந்தபோது கரிய மேனியுடன் காட்சித்தந்த தால் இவருக்கு நீலன் என்று திருப்பெயரிட்டனர் பெற்றோர். நீலன் பிள்ளைப் பருவத்தில் கல்வி யைக் கற்றான். தமிழ் இலக்கணம் ஐந்தையும், புராண இதிகாசங்களையும் சங்க நூற்களையும் கற்றுத் தேர்ந்தான்.

தமிழறிவு பெற்ற நீலன் கலையறிவு பெறவிரும் பினான். தந்தை தன் மகனுக்குப் படைக்கலப்பயிற்

சியைக் கற்றுத் தந்தார். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? நீலன் வாட்போரிலும் விற்போரிலும் தந்தைக்கு ஈடாகத் தலைநிமிர்ந்து நின்றான்.

நீலனின் வீரத்தையும் ஆற்றலையும் கேள்விபட்ட அரசன். தன்படைக்குத் தளபதியாக நியமித்தான். சோழனைப் பகைத்த பகையரசர்களை நீலன் போரில் வென்றான். சோழனுக்கு வெற்றிகளைத் தேடித் தந்ததால் நீலனுக்குப் 'பரகாலன்' என்ற பட்டத்தை வழங்கினான்.

நீலனின் திறமையைப் பாராட்டி திருமங்கை என்ற நாட்டிற்கு அவனை அதிபதியாக்கினான். நீலன் சிற்றரசனாக முடிசூட்டிக் கொண்டதும் திருமங்கை மன்னன் என்ற பெயர் பெற்றான். நீலன் குறுநில மன்னனானதும் இயல், இசை நாடகம் என்னும் முத்தமிழை வளர்த்தான். நாடகக் கலையில் நாட்டம் அதிகம் கொண்டதால் நடன மகளிரிடம் நாட்டம் அதிகரித்தது. அதனால் சிற்றின்பத்தில் அதிக நாட்டம் செலுத்தினான்.

திருமங்கை மன்னன் ஒரு நாள் தன் பரிவாரத்துடன் 'திருவெள்ளக்குளம்' என்னும் அண்ணன் கோயிலுக்குச் சென்றான். அவ்வூரில் மருத்துவன் என்னும் வைணவப் பெரியார் வாழ்ந்து வந்தார். திருமால் பக்தியில் சிறந்த மருத்துவன் வீட்டில் ஒரு பெண் வளர்ந்து வந்தாள்.

பேரழகும் இலக்குமி போன்ற இலட்சணமும் அடக்கத்தில் நிலமகளுக்கு ஒத்திருந்தாள். நாற் குணமும் அவளிடம் அடங்கியிருந்தன. வைணவ பக்தரான மருத்துவன் தன் வளர்ப்பு மகளையும் வைணவ நெறியில் மனதை ஈடுபடுத்தி வைத் திருந்தார். அவள் அழகிற்கு ஏற்ற பெயராக 'குமுதவல்லி' என்று அழைத்தனர்.

குமுதவல்லி தந்தையின் அடிவொற்றித் திருமாலுக்குத் தொண்டு செய்து வந்தாள். திருமால் பக்தர்களைத் தவிர வேறு எவரையும் கண்ணெடுத்தும் பார்க்காமல் இருந்தாள்.

திருமங்கை மன்னன் திருவெள்ளக்குளம் சென்றதும் வைணவ பக்தர் மருத்துவன் புகழைக் கேள்விப்பட்டான். அவரை நேரில் பார்க்க அவர் வீட்டிற்குச் சென்றான். வீடுதேடிவந்த திருமங்கை மன்னனை நாடியோடி மருத்துவன் வரவேற்று உபசரித்தான்.

இருவரும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந் தார்கள். குமுதவல்லி வீட்டில் நடமாடிக் கொண் டிருந்தாள். திருமங்கை மன்னன் அவளைப் பார்த்தான். அழகில் சிறந்த குமுதவல்லி மீது மனம் சென்றது.

திருமங்கை மன்னன்குமுதவல்லியைத்தான் மனைவியாக அடைய வேண்டும் என்று நினைத்

தான். திருமங்கைக்குத் திரும்பி வந்ததும் தீர யோசித்தான். ஆடையாபரணங்களைப் பரிசுப் பொருளாக எடுத்துக் கொண்டு திருவெள்ளக்குளம் சென்றான். மருத்துவன் முன் வைத்து வணங்கினான், தன் மனக்கருத்தைக் கூறினான்.

தன் மகள் குமுதவல்லிக்கு ஏற்ற கணவனை எதிர்பார்த்துக் காத்திருந்த மருத்துவன் தம்பதிகளுக்கு மனதில் மகிழ்ச்சி ஏற்பட்டது. குமுதவல்லியைத் திருமணம் செய்துதர ஒப்புக் கொண்டனர். ஆனால் குமுதவல்லியின் கருத்தை அறிய வேண்டும் என்று கூறினார்கள்.

திருமங்கை மன்னன் அவர்கள் கருத்திற்கு இசைந்தான். குமுதவல்லியின் கருத்தை அறிந்து வரச் சொன்னான். அவர்கள் மகள் குமுதவல்லியிடம் தங்கள் கருத்தைக் கூறினார்கள்.

"அப்பா! உங்கள் விருப்பப்படி நான் மணம் செய்து கொள்ள சம்மதிக்கிறேன். ஆனால் எனக்குக் கணவராக வருபவர் வைணவ பக்தராக இருக்கவேண்டும். அப்படிப் பட்டவருக்கு நான் மனைவியாக விரும்புகிறேன்." என்று சொன்னாள் குமுதவல்லி.

மருத்துவன் தன் மகளின் கருத்தைத் திருமங்கை மன்னனிடம் சென்று சொன்னான். குமுதவல்லி மீது அளவிலா காதல் கொண்ட திருமங்கை

மன்னன் "குமுதவல்லி என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறாள். அதைச் சொல்லுங்கள் நான் செய்து முடிக்கிறேன்" என்று சொன்னான்.

"திருநறையூருக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் பெருமானிடம் தப்தசக்ராங்கம், திருமண்காப்பு முதலான பஞ்சஸம்ஸ்காரமுடைய வைணவராக வர வேண்டும். அவ்வாறு வரும் வைணவர்க்கு நான் மனைவியாக வாழச் சம்மதிக்கிறேன்." என்று சொன்னாள் என்றார்கள்.

திருமங்கை மன்னன் குமுதவல்லி சொன்னபடி திருநறையூருக்குச் சென்றான். அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை வணங்கி பஞ்ச சம்ஸ்காரங்களைப் பெற்றுப் பரம வைணவராய் திருவெள்ளக் குளத்திற்கு வந்தார்.

வைணவராக வந்த திருமங்கை மன்னனைக் குமுதவல்லி பார்த்தாள். மீண்டும் ஒரு நிபந்தனை என்றாள். அது என்ன என்று ஆவலோடு கேட்டான் திருமங்கை மன்னன்.

"நீர் ஓராண்டு காலம் தினமும் ஆயிரத்தெட்டு வைணவர்களுக்கு அமுது படைக்க வேண்டும். அவர்கள் உண்ட கலயங்களையும் அவர்கள் பாதங்களையும் கழுவி தூய்மை படுத்த வேண்டும். அவ்வாறு மனம் ஒத்து செய்தால் மணம் செய்து கொள்கிறேன்" என்று கூறினாள்.

குமுதவல்லி மீது தீராத காதல் கொண்ட திரு மங்கை மன்னன் அவளை அடைய எண்ணி குமுத வல்லி சொன்னபடி செய்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தான். அச்சத்தியத்தை ஏற்ற மருத்துவன் குமுதவல்லிக்கும் திருமங்கை மன்னனுக்கும் திருமணம் செய்வித்தான்.

இருவரும் இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்கு முன் திருமங்கை மன்னன் செய்து கொடுத்த சத்தியத்தை நிறைவேற்ற ஈடுபட்டான். தினமும் ஆயிரத்தெட்டு வைணவ பக்தர்களுக்கு அமுது படைத்து வந்ததால் அவனிடமுள்ள பணம் அனைத்தும் தீர்ந்துவிட்டது. அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பணத்தைத் திறை யைச் செலுத்தவில்லை.

அரசன் அச்செய்தியைக் கேட்டான். சில வீரர் களை அனுப்பி திறை செலுத்தாத திருமங்கை மன்னனைக் கைது செய்து கொண்டு வருமாறு கட்டளையிட்டான். திருமங்கை மன்னன் அவர் களை வென்று புறமுதுகிட்டு ஓடச் செய்தான்.

இதையறிந்த அரசன் தன் படைத்தலை வனை அழைத்தான். படைவீரர்களுடன் சென்று திருமங்கை மன்னனைக் கைது செய்து கொண்டு வருமாறு கூறினான்.

படைத் தளபதி படையுடன் சென்று திரு மங்கை மன்னனைச் சுற்றி வளைத்துப் பிடிக்க

முயன்றான். திருமங்கை மன்னன் தனது 'ஆடல்மா' என்னும் குதிரை மேல் ஏறி படை களோடு சென்று போரிட்டான். படைத்தளபதி புற முதுகிட்டு ஓடினான்.

படைத்தளபதி தோற்று ஓடிவந்த செய்தி அறிந்த அரசன் தன் பெரும் படையுடன் சென் றான். திருமங்கை மன்னன் அஞ்சாது அரசனை எதிர்த்துப் போரிட்டான். திருமங்கை மன்னனைப் போரிட்டு வெல்ல முடியாது என்று அரசன் புரிந்து கொண்டான். சூழ்ச்சியால் அவரைக் கைது செய்தான். அவரை அமைச்சரிடம் ஒப்படைத் தான். தனக்குச் செலுத்த வேண்டிய திறையைச் செலுத்திவிட்டு விடுதலையாகலாம் என்று சொன்னான்.

அமைச்சன் திருமங்கை மன்னனைப் பிடித்து ஒரு கோவிலில் சிறை வைத்தான. அவருக்கு உண்ண உணவும் தண்ணீரும் கொடுக்காமல் பட்டினிப் போட்டான். அதை அறிந்த எல்லாம் வல்ல வரதராஜப் பெருமாள், திருமங்கை மன்னன் கனவில் தோன்றி, ''காஞ்சிக்கு வந்தால் வேண்டிய பொருளைத் தருகிறோம்'' என்று கூறி மறைந்தார்.

மறுநாள் அமைச்சரிடம், ''அமைச்சரே! என் னுடன் காஞ்சிக்கு வந்தால் அரசனுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பணம் அனைத்தும் கொடுத்து

விடுகிறேன்'' என்று சொன்னார் திருமங்கை மன்னன்.

அமைச்சர் திருமங்கை மன்னனின் பேச்சைக் கேட்டு அவரைக் காஞ்சிக்கு அழைத்துச் சென்றான். காஞ்சியில் இறைவன் கூறிய இடத்திற்குச் சென்றதும் அங்குப் பொருள் கிடைக்கவில்லை. திருமங்கை மன்னன் அதை நினைத்துக் கவலைப் பட்டார். அமைச்சருக்கு என்ன பதில் சொல்வது? என்று வேதனைப்பட்டார். அப்பொழுது பேரருளாளனான தெய்வப் பெருமான், குழலூதும் கண்ணனாகக் கனவில் வந்து திருமங்கை மன்னனை வேகவதிக் கரைக்கு அழைத்துச் சென்றார். அங்குள்ள பெருஞ்செல்வத்தைக் காட்டி மறைந்தார்.

திருமங்கை மன்னன் வேண்டிய செல்வத்தை எடுத்தார். மன்னனுக்குச் சேர வேண்டிய திறைப் பணத்தை அமைச்சரிடம் கொடுத்தார். எஞ்சிய பணத்தையெல்லாம் வைணவ பக்தர்களுக்கு அமுது படைத்தார்.

அமைச்சன் திருமங்கை மன்னன் கொடுத்த திறைப் பணத்தை அரசனிடம் கொடுத்தான். கச்சியில் கண்டதை அரசனிடம் சொன்னான். அதைக் கேட்ட அரசன் வியப்படைந்தான். திருமங்கை மன்னனை அழைத்தான். தன் தவறைப் பொறுக்குமாறு வேண்டினான். அவர் கொடுத்த

பணத்தையெல்லாம் அவரிடம் திருப்பிக் கொடுத்தான்.

அரசன் கொடுத்த பெருஞ்செல்வத்தையும் வைணவ பக்தர்களுக்கு அமுது படைத்துச் செலவிட்டார். அவ்வறப் பணி தொடர்ந்து செய்ய பணமில்லை. அதனால் பக்தர்களுக்கு வழங்கும் அமுது படைக்கும் பணி தடைபடக் கூடாது என்று எண்ணினார். பணத்தைத் திரட்ட என்ன வழி என்று யோசித்தார். நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், தாளுதுவான், (எந்தப் பூட்டையும் உடைப்பவன்) தோலாவழக்கன் ஆகிய நால்வரைத் தனக்குத் துணையாக அழைத்துக் கொண்டார்.

தீயவழிகளில் பணத்தைச் சேர்த்து வைத்திருப்பவர்களிடம் சென்று கொள்ளையிட்டார். காட்டு வழிகளில் பதுங்கிக் கொண்டு தனியாக வருபவர்களிடம் கொள்ளையடித்தார்.

இவ்வாறு கொள்ளையடித்த பெருஞ்செல்வங்களைக் கொண்டு வைணவ பக்தர்களுக்கு அமுது படைத்தார். வைணவ ஆலயங்களுக்குத் திருப்பணி செய்தார். தனக்கென ஒரு பொருளும் அதில் எடுத்துச் செலவழிக்காதிருந்தார். இதனால் தனக்கென வாழும் நிலை மாறி அடியார்களுக்கென வாழும் மனநிலை அடைந்தார்.

திருமால் மீது தீராதபக்தி கொண்ட திருமங்கை மன்னன் தீயவழிகளில் செல்வதைத் தேடுவதைத் தடுத்து அவரை ஆட்கொள்ள வேண்டும். அன்பு மார்க்கத்தைக் காட்ட வேண்டும். பக்தி நெறியில் செலுத்த வேண்டும் என்று எம்பெருமான் ஆசைப் பட்டார். அதனால் எம்பெருமான் அந்தண தம்பதிகள்கோலம் கொண்டு ஆடை ஆபரணங் களோடுகாட்டுவழியே வந்தார்.

வழி பறிக்கும் தொழிலைக் கொண்ட திருமங்கை மன்னன் திருவாலி திருநகரிக்கு அருகில் திருமணங் கொல்லையில் திருவரசு மரத்தின் கீழே பதுங்கியிருந்தார். அவ்வழியே அந்தண தம்பதிகள் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் பெருஞ் செல்வம் உடைய இவர்களிடம் கொள்ளையடித்தால் பக்தர்கள் பசிதீர அமுது படைக்கலாம் என்று எண்ணினார். திடீரென்று அவர்களுக்கு எதிரே சென்று வளைத்துக் கொண்டார்.

"அந்தண தம்பதிகளே! உங்களிடம் இருக்கும் பொருட்களை எல்லாம் கொடுத்து விடுங்கள்." என்று சொன்னார் திருமங்கை மன்னன்.

அந்தண தம்பதிகள் தங்களிடம் இருந்த எல்லாப் பொருள்களையும் கொடுத்தார்கள். ஆனால் அந்தணர் காலில் அணிந்து இருந்த

கணையாழி மோதிரத்தைக் கழற்ற முடியவில்லை. ‘‘அப்பனே! இந்த மோதிரத்தை உன்னால் கழற்ற முடியுமானால் கழற்றி எடுத்துக் கொள்.’’ என்று சொன்னார்.

திருமங்கை மன்னன் கணையாழியைக் கையால் கழற்றிப் பார்த்தார் வரவில்லை. பல்லால் கடித்து எடுத்தார் அந்தணன் உருவில் இருந்த எம்பெருமான் நீ கலியனோ’ அதாவது மிகப் பல முடையவனோ என்று கேட்டார். அதனால் திருமங்கை மன்னனுக்குக் ‘கலியன்’ என்றும் பேருண்டாயிற்று.

அந்தண தம்பதிகளிடம் பறித்த பொருள் களைச் சுமையாகக் கட்டித் தூக்கிச் செல்ல முயன்றார். ஆனால் அச்செல்வ மூட்டையைத் தூக்க முடியாமல் திணறினார் திருமங்கை மன்னன். அந்தணனைப் பார்த்தார். ‘‘ஐயா! நீர் என்ன மந்திரவாதியா? உம்மிடம் பறித்த பொருட் சுமையைத் தூக்க முடியாமல் என்ன மந்திரம் செய்தீர். அதை எமக்குச் சொல்லிக் கொடு.’’ என்று கேட்டார் திருமங்கை மன்னன்.

அதைக் கேட்ட அந்தணர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். திருமங்கை மன்னன் தன் உடைவாளைக் காட்டி. ‘‘ஏன் பேசாமல் நிற்கிறாய். அந்த மந்திரத்தை எமக்குச் சொல்லிக் கொடு’’ என்று கேட்டார்.

அந்தணர் சிரித்துக் கொண்டே "ஆலி நாடா! பரகாவலா! என் அருகில் வா. மந்திரத்தை உம்மைத் தவிர வேறு யாரும் கேட்கக் கூடாது." என்று திருமங்கை மன்னனைத் தன் அருகில் அழைத்தார். அவன் காதருகில் "ஓம் நமோ நாராயண"! என்னும் மகா மந்திரமாகிய திரு மந்திரத்தை ஓதினார். திருமங்கை மன்னன் அம் மந்திரத்தைத் தன் வாயால் பல முறைச் சொன் னான். அதைக் கேட்டு அந்தண வடிவில் வந்த திருமால் ஒரு செம்பொற் குன்றின் மேல் காட்சி தந்து நின்றார்.

திருமங்கை மன்னன் அந்தணனாக வந்த திருமாலின் பாதத்தில் வாய் வைத்துச் சுவைத்த தாலும்; அப்பெருமானிடம் ஓம் நமோ நாராயணா என்ற மகாமந்திரத்தைக் கற்றதாலும், மாலவனை நேரில் தரிசித்ததாலும் அவரிடம் மண்டிக்கிடந்த அஞ்ஞான இருள் அகன்றது. மெய்ஞ்ஞான பக்தி ஒளி உள்ளத்தில் வீசியது. அதனால் நீலன் என்ற திருமங்கை மன்னன் திவ்யப் பிரபந்தங்களைப் பாடலானார்.

திருமங்கை ஆழ்வார் "வாடினேன் வாடி... என்று தொடங்கி நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்" என்று பெரிய திரு மொழியில் முதல் திருமொழியைப் பாடியருளினார்.

திருமால் மீது தீராத பக்தி கொண்ட திருமங்கையாழ்வார் பாரத தேசத்தில் உள்ள

மாலவன் திருக்கோயில்களைக் கண்டு வணங்க ஆர்வம் கொண்டார். அநந்தசயன கோலத் தோடு பரிமளவல்லியுடன் எழுந் தருளியிருக்கும் பரமபுருஷனைத் 'திருப்பிரிதி' என்னும் தலத்தில் வணங்கினார். பிறகு நாராயணர்கள் எழுந்தருளி யிருக்கும் வதரியையும் வணங்கி வழிபாடு நடத்தினார்.

திருமால் எழுந்தருளிய திருப்பதிகள் பலவும் கண்டு வணங்க வடக்கே சென்றார். அங்கு சாளக்கிராமத்தையும் கண்டார். அதன் பிறகு நைமிசாரணியத்தையும் பார்த்தார். அங்கிருந்து புறப்பட்டுச் ''சிங்க வேள் குன்றம்'' என்னும் அஹோபிலத்தை வணங்கினார். தெற்கே வந்து திருவேங்கடத்தை வணங்கித் தென்நோக்கி வந்தார்.

தொண்டை நாட்டுத் திருப்பதிகளை வணங்கி னார். திருவல்லிக்கேணியில் எழுந்தருளியுள்ள பார்த்தசாரதி பெருமாளைத் தரிசித்துவிட்டு திருநீர் மலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை வணங்கினார். கடைசியாகக் கடல்மல்லைக்குச் சென்று அங்குப் பள்ளிக்கொண்டிருக்கும் பெரு மானை வணங்கினார். பிறகு சோழநாட்டுப் பதி களில் எழுந்தருளியுள்ள திருமாலின் திருக்கோலங் களைக் கண்டு களிக்கச் சென்றார்.

சோழநாட்டில் திருச்சித்திரக் கூடத்தை வணங்கி விட்டுத் திருக்காழிச்சீராம விண்ண கரத்தை வணங்கி புறப்பட்டார். சோழ நாட்டில்திரு மொழி ஈறாக உள்ள பதினொறு பதிகளை வணங்கி மணிவண்ணன் சேவடிகளைக் கண்ணாரக் கண்டு போற்றினார்.

பிறகு பாண்டியநாடு, மலைநாடு சென்று திருப்பல்லனி முதல் திருமாலிருஞ்சோலை வரை உள்ள விண்ணகரப் பதிகளை வணங்கி மாய வனைக் கண்டு மனம் உருகிப் பாடினார்.

இவ்வாறு திருமங்கை ஆழ்வார் வட நாடும் தென்னாடும் சென்று திருமாலின் பாதமுதல் முடிவரைக்கண்டு ஆனந்தப்பட்டார். அவரின் அவ தாரங்களை எண்ணி எண்ணி மகிழ்ந்து மனமுருகி பெரியதிருமொழி என்னும் பிரபந்தங்களைப் பாடினார்.

சீர்காழி பதிக்குத்தன் பக்தர்களுடன் செல்லும் போது அவ்வூரில் இருந்த திருஞானசம்பந்தர் நாயனார் சிறந்த சிவனடியார். சிவனடியார் கூட்டம் அவரைச் சூழ்ந்து நின்றது. திருமங்கை ஆழ்வார் அவ்வூருக்கு வருகை தந்ததை அறிந்த தும் அவர் பரிவட்டத்துடன் செல்லலாகாது என்று தடுத்தனர். அது கண்ட திருமங்கை ஆழ்வார் ஞானசம்பந்தருடன் வாதிட்டார்.

இருவரும் கவி வாதப்போர் நடத்தினார்கள். ஞானசம்பந்தர் சொன்ன கவியில் ஆழ்வார் குற்றம் கண்டு சொன்னார். பிறகு ஆழ்வார் சங்கமுகத் தமிழ்மாலைப் பாடலைப் பாடினார். அதைக் கேட்டு மறுமொழி சொல்லாமல் பாடலின் பொருளைப் பாராட்டினார். ''உமக்கு இவ்விருதுகளெல்லாம் பொருந்தும்.'' என்று வாழ்த்தி விட்டுத் தம் கையில் இருந்த வேலாயுதத்தைக் காணிக்கையாக அளித்தார்.

குமுதவல்லியும் ஆழ்வாரும் திருவரங்க பெருமாளை வணங்கினார்கள். ஆலயத்தின் கோபுரமும் மதில்களும் பழுதுற்றிருந்தன, இப்பெருமானின் கோபுரத் திருப்பணியை செய்ய வேண்டும் என்று ஆழ்வார் எண்ணினார். அப்பெரும்பணிக்கு நிறைய பொருள் தேவை. அதை எங்குச் சென்று பெறுவது? எப்படித் திரட்டுவது என்று யோசித்தார்.

புத்த விஹாரத்தில் இந்திர பொறிகள் அமைக்கப்பட்டிருந்தன. அதையறிந்த ஆழ்வார் தன் சீடர்களுக்கு இயந்திரத்தை நிறுத்தும் முறையைக் கற்றுத் தந்தார். சீடர்களால் அச்சிலையைக் கவர்ந்து வர முடியவில்லை. ''ஈயத்தாலகாதோ'' என்று தொடங்கி மாயப் பொன் வேணுமோ மதித் தென்னைப் பண்ணுகைக்கே'' என்று பாடி ஆழ்வார் அச்சிலையை எடுத்தார். அதைச் சீடர்கள் கண்டு ஆச்சரியப் பட்டனர்.

அச்சிலையைக் கவர்ந்து வரும் பொழுது திருக் கண்டு கண்ணங்குடி கிராமத்தில் வயலில் புதைத்து வைத்தார். அவ்வயலுக்குச் சொந்தக்காரன் வயலை உழுவதற்கு வரும்பொழுது நிலத்தில் வழக்கொன்று உண்டு என்று தடுத்தார். வயலுக்குச் சொந்தக் காரன் திடுக்கிட்டு நின்றான்.

மறுநாள் வயலில் புதைக்கப்பட்ட சிலையை எடுத்துக் கொண்டு திருவரங்கம் சென்றார். அங்கு அதை உருக்கி பொன்னாக்கி விற்றார். அப்பொரு ளைக் கொண்டு கோபுரத் திருப்பணியைச் செய்து முடித்தார்.

திருமங்கையாழ்வார் தமது திவ்யப் பிரபந்தப் பாடல்களைப் பாடிய பின்பு திருவரங்கத்தில் திருநெடுந்தாண்டகத்தை இசையால் பாடி மகிழ் வித்தார். இப்பாடலைக் கேட்டு ஆனந்தம் கொண்ட எம்பெருமான் "உமக்கு வேண்டும் வரத்தைக் கேள்" என்றார்.

இறைவன் அருள் வாக்கைக் கேட்ட திருமங்கையாழ்வார் "மாலே மணிவண்ணா! மார்கழி மதத்தில் நடைபெறும் திருவிழாவின்போது நம்மாழ்வார் அருளிச் செய்த திராவிட வேதத்தை யும் திருச்செவி ஏற்கவேண்டும்" என்று வேண்டி னார்.

ஆழ்வாரின் வேண்டுதலை ஏற்று எம்பெரு மான் அருள் செய்தார். அவ்வாணையின்படி

